உங்கள் பிரதிகளுக்கு முந்துங்கள்!



# மங்கை

ஜூலை '97 இதழ்

## அக்கரைச் சிறப்பிதழாக

**மலர்ந்துள்ளது**

- அமெரிக்கா, இங்கிலாந்து, மலேசியா, சிங்கப்பூர், இலங்கை, கனடா, ஹாங்காங், ஜப்பான், சுவிட்சர்லாந்து ஆகிய நாடுகளில் உள்ள ஆலயங்கள் பற்றிய சிறப்புக் கட்டுரைகள்.
- அயல் நாடுகளில் அரங்கிசை.
- மங்கை வாசகிகளின் அக்கரை அனுபவங்கள்.
- வெளிநாடுகளில் **சத்ய சாயி பாபா** நிகழ்த்திய அற்புதங்கள்.





- பாரீசில் பரதம்.
- **கதிர்காமக் கந்தனின்** முழுப்பக்க வண்ணப்படம்.

மற்றும்

வழமையான பல்சுவைப் பகுதிகள்

**விலை ரூ. 9/-**



# அம்புலிமாமா

## ஜூலை 1997



## பொருளடக்கம்






**தனிப்பிரதி ரூ.6.00**

**வருட சந்தா ரூ.72.00**





# அம்புலிமாமா

நிறுவனர்: **'சக்கரபாணி'** நிர்வாக ஆசிரியர்: **நாகிரெட்டி**


## படித்தவர்களின் கடமை

நம் நாடு வளர்ச்சி பெற்று வரும் நாடு. ஐம்பது ஆண்டுகளுக்கு முன் சுதந்திரம் பெற்ற நம் நாடு எப்படி உள்ளது என்று சற்று சிந்தித்துப் பாருங்கள். நாம் போர் விமானங்களையும் ஏவுகணைகளையும் விண்வெளிக் கலங்களையும், மோட்டார் கார்களையும், ரயில் என்ஜின்களையும் நல்ல துணிகளையும் தயாரித்து விடுகிறோம். ஆயினும் நம்மில் 40 சதத்தினர் வறுமைக் கோட்டின் கீழ்த்தான் இன்னமும் இருக்கிறார்கள். 50 சதவிகிதத்தவர்க்கு இன்னமும் எழுதப் படிக்கத் தெரியாது.

லட்சக்கணக்கான சிறுவர், சிறுமியர் பள்ளிக்குச் செல்வதில்லை. நம் நாட்டில் கல்விக்காகச் செலவு செய்வது பட்ஜட்டில் 25 சதவிதமே. நம் போல வளர்ச்சி பெற்று வரும் நாடு கொரியா. அது கூடத் தன் பட்ஜட்டில் 30 சதவீதம் கல்விக்காக செலவு செய்கிறது.

சுதந்திரம் பெற்று ஐம்பது ஆண்டுகளாகியும் நம்மில் பலர் எழுத்தறியாமை என்பதற்கு இன்னமும் அடிமைகளாகவே இருக்கிறார்கள். மகாத்மா காந்தி அன்று சொன்னார். "ஒவ்வொருவரும் ஒருவருக்கு கல்வி கற்றுக் கொடுங்கள்!" இது வரை நாம் இதைச் செய்யாமல் இருந்து விட்டோம். படித்தவர்களாகிய நாம் தாம் எழுத்தறியாமையைப் போக்க வேண்டும். அம் முயற்சியை இந்தப் பொன் விழா ஆண்டில் மேற்கொள்வோமாக.


**மதிமுகம்: 101** **ஜூலை 1997** **புன்னகை: 1**

**தனிப்பிரதி: ரூ.6.00** **வருட சந்தா: ரூ.72.00**




செய்திகளும் தகவல்களும்

# பிரிட்டனின் புதிய பிரதமர்

ஸ்காட்லாந்தைச் சேர்ந்த பதினான்கு வயதுச் சிறுவன் தான் படிக்கும பள்ளியில் கடுமையான கட்டுப்பாடுகள் விதிக்கிறார்களே என எண்ணிப் பயந்து தன் வீட்டை விட்டு ஓடி மேற்கிந்தியத் தீவின் பஹாமாஸிற்குப் போய் விடுவதெனத் தீர்மானித்தான். ஆனால் அது நடக்கவில்லை. இது முப்பது ஆண்டுகளுக்கு முந்தைய விஷயம். இன்று அந்தச் சிறுவன் பிரிட்டனின் பிரதமராகி 10 டௌனிங் தெருவில் வாசம் புரிகிறான். ஆம் அவனது பெயர் டோனி ப்ளேர் தான்.



கடந்த மே மாதம் முதல் தேதியில் நடந்த பொதுத் தேர்தலில் பிரிட்டனில் டோனி ப்ளேரின் தலைமையிலான தொழிற் கட்சி அமோக வெற்றி பெற்று ஆட்சியைக் கைப்பற்றியது. இத்தேர்தலில் இதற்கு முன் ஆட்சியிலிருந்த கன்சர்வெடிவ் கட்சி படுதோல்வி அடைந்தது. பிரிட்டனின் நாடாளும் மன்றத்தின் 659 இடங்களில் தொழிற் கட்சி 419 இடங்களைக் கைப்பற்றியது. கன்செர்வெடிவ் கட்சிக்கு 163 இடங்களும் லிபரல் கட்சிக்கு 45 இடங்களும் மற்ற இடங்கள் வேறு கட்சிகளுக்கும் சுயேச்சைகளுக்கும் கிடைத்தன.

கன்செர்வெடிவ் உறுப்பினர்களான ஸ்காட்டிஷ் பெற்றோர்களுக்கு 1953ல் டோனி ப்ளேர் பிறந்தார். பள்ளிப் படிப்பை முடித்து விட்டு அவர் சட்டம் பயில ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்திற்குச் சென்றார். செயிண்ட் ஜான் காலேஜ் அவரது சிந்தனைப் போக்கில் திருப்பத்தை ஏற்படுத்த, அவரது ஆசிரியர்களும், சக மாணவர்களும் அவரது எண்ணங்களை உருவாக்கிக் கொடுத்தார்கள். அவர் சோஷலிசக் கொள்கைகளால் ஈர்க்கப்பட்டார். அதுவே தொழிற்கட்சியில் சேர ஊக்கம் அளித்தது. அவர் தொழிற் சங்க சட்டங்களைப் படித்து சிறப்பு பெற்றார். அரசியலில் வருமுன் அவர் வழக்கறிஞராகவும் சிறிது காலம் பணிபுரிந்தார்.

அவர் தொழிற் கட்சி உறுப்பினராக 1983ல் பிரிட்டனின் நாடாளும் மன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அப்போதும் அவர் அம்மன்றத்தில் மிக வயது குறைந்த உறுப்பினர். 1992ல் தொழிற் கட்சியின் 'ஷேடோகாபினெட்'டில் அமைதி காக்கும் துறையை கவனித்து வந்தார். 1994ல் இவர் தொழிற் கட்சியின் தலைமையை ஏற்றார். 1906ல் நிறுவப்பட்ட தொழிற் கட்சியின் 20வது அதிபர் இவர். பொதுத் தேர்தலுக்கு முன் எடுக்கப்பட்ட வாக்குக் கணிப்பில் 61 சதவிகித மக்கள் இவர் பிரதமராக வேண்டுமென வாக்களித்தார்கள். கன்செர்வேடிவ் தலைவர் ஜான் மேஜருக்கு 21 சத வாக்குகளே கிடைத்தன.

ஆனால் பொதுத் தேர்தலில் இப்படி மகத்தான பெரும்பான்மை கிடைக்குமென ப்ளேர் கூட எதிர்பார்க்கவில்லை. இவர் தம் கட்சிக்கு சாதாரணப் பெரும்பான்மைதான் கிடைக்குமென எதிர்பார்த்தார். கன்செர்வெடிவ் கட்சி இவ்வளவு படுமோசமான தோல்வியை அடையுமென இவர் எதிர்பார்க்கவில்லை.

தமக்கு வெற்றி நிச்சயம் என அறிந்ததும் ப்ளேர் தம் ஊரில் நடந்த ஊர்வலக் கூட்டத்தில் ''நம் நாட்டில் புது யுகம் தோன்றி விட்டது. சில முக்கியத் துறைகளில் நாம் அதிகம் உழைக்க வேண்டும். குறிப்பாக நம் சிறுவர்களுக்குக் கல்வி பராமரிப்புத் திட்டங்கள், சுகாதாரம் முதலியவற்றின் மீது கவனம் செலுத்த வேண்டும்'' என்றார்.

43 வயதில் தற்காலத்தில் பிரிட்டனின் பிரதமரானவர் என்ற பெருமையை டோனி ப்ளேர் பெற்றார். இவருக்கு முன் 1812ல் தமது 42வது வயதில் பிரிட்டனின் பிரதமரானவர் லார்ட் லிவர்பூல் என்பவர்.



# அறிவுரை யாருக்கு?

கடம்பூரில் கண்ணப்பன் புதிதாக வீட்டை வாங்கினான். அவனுக்கு அடுத்த வீட்டுக்காரன் சின்னப்பன். கண்ணப்பனைப் போலவே சின்னப்பன் பணக்காரன். அவன் வயதும் கண்ணப்பன் வயதும் ஒன்றே. கண்ணப்பன் ஒரு நாள் சின்னப்பனிடம் ''நீங்கள் இந்த ஊரில் பல ஆண்டுகள் இருந்து வருகிறீர்கள். எனக்கு அவ்வப்போது யோசனைகளையும் அறிவுரைகளையும் கூறி வரவேண்டும். சில சமயங்களில் என் யோசனைகளையும் உங்களுக்குக் கூறுகிறேன்'' என்றான்.

சின்னப்பனோ ''நான் யாருக்கும் யோசனையோ அல்லது அறிவுரையோ கூறமாட்டேன். பிறரது யோசனைகளையும் அறிவுரைகளையும் ஏற்க மாட்டேன்'' என்றான். கண்ணப்பனும் ''சரி. இது இல்லாது போனாலும் நாம் நல்ல நண்பர்களாக இருந்து வருவோம்'' என்றான். சின்னப்பனும் ''சரி. என்னிடமிருந்து எந்த அறிவுரையையும் எதிர்பாராதே. நானும் உன் அறிவுரைகளை ஏற்க மாட்டேன். நீ ஏதாவது சொன்னாலும் அது வீண்தான்'' என்றான். கண்ணப்பன் மெதுவாகச் சிரித்தவாறே தன் வீட்டிற்குச் சென்றான்.

ஒரு நாள் கண்ணப்பன் சின்னப்பனிடம் ''நீ உன் ரொக்கப் பணம் லட்சம் ரூபாயை இரும்புப் பெட்டிக்குள் பூட்டி வைத்திருக்கிறாயே. அதை முதலாக வைத்து ஒரு வட்டிக் கடை ஆரம்பித்தால் உனக்கு நிறையப் பணம் கிடைக்குமே'' என்றான். சின்னப்பனும் ''கடன் வாங்குபவனுக்கு எவ்வளவோ தொல்லைகள் இருக்கும். அதனால் அவர்கள் வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்காமலும் இருக்கலாம். பண விஷயத்தில் தயவு தாட்சண்யம் பார்க்கக் கூடாது. ஐயோ பாவம் என இரக்கப்பட்டால், நமக்குத்தான் பண நஷ்டம் ஏற்படும்.

—சிவனார் செல்வன்—

கடுமையாக நடந்தாலே வட்டிக்கடை நடத்த முடியும். அப்படி இருக்க என்னால் முடியாது. அதனால் நான் வட்டிக் கடை வைத்து நஷ்டப்படத் தயாராக இல்லை'' என்று கூறினான்.

சில நாட்களுக்குப் பின் கண்ணப்பன் சின்னப்பனிடம் ''உன் மகன் நன்கு படித்தவனாயிற்றே. அவனுக்குப் பட்டணத்தில் நல்ல வேலை கிடைக்குமே. உன் மகளுக்கும் உன் வீட்டிலேயே வந்து இருக்கக் கூடிய மாப்பிள்ளையாகப் பார்த்து மணம் செய்து வை. அவன் விவசாயத்தை கவனிக்க உன் மகள் உன்னை நன்கு கவனித்துக் கொள்வாள். உன் மகனுக்குக் கல்யாணமானால் அவன் மனைவி அவனைத் தன் கைக்குள் போட்டுக்கொண்டு உன்னைப் படாத பாடுபடுத்துவாள். அதனால் உன் மகளிடம் நீ வயது காலத்தில் இருப்பதே நல்லது'' என்றான்.

சின்னப்பனோ ''கணவனும் மனைவியும் சேர்ந்து குடித்தனம் செய்வதே சரி. தாய் தகப்பன் வீட்டில் மகளும் மாப்பிள்ளையும் இருந்தால் மகள் தன் கணவனை லட்சியம் செய்ய மாட்டாள். அதனால் ஒரு பெண் தன் மாமியாரின் வீட்டில் இருப்பதே முறையானது. நம் வீட்டு மருமகள் நம் வீட்டிற்கு வரும்போது அவளை நம் வீட்டுப் பெண்ணாகக் கருதி நடந்தி வந்தால் எந்தப் பிரச்னையும் இராது'' என்றான்.

சில நாட்கள் கழிந்தன. அப்போது அப் பகுதியில் கொள்ளைக் கூட்டத்தின் அட்டகாசம் அதிகரித்துக் கொண்டிருந்தது. கொள்ளைக்காரர்கள் கிராமங்களை தாக்கிப் பொருள்



களைக் கவர்ந்து சென்றனர். அவர்களைக் காவல் வீரர்களால் பிடிக்க முடியவில்லை. அதனால் ஒவ்வொரு கிராமத்திலும் இளைஞர்கள் சேர்ந்து பாதுகாப்புப் படைகளை அமைத்துக் கொண்டனர். அப்படியும் கொள்ளைக்காரர்களின் தொல்லைகள் நிற்கவில்லை.

இதனால் கண்ணப்பன் சின்னப்பனிடம் ''நம் ஊருக்கும் கொள்ளைக்காரர்கள் வரலாம். அதனால் நம் இரும்புப் பெட்டியிலுள்ள பணத்தை எல்லாம் அவர்கள் எடுத்துப் போய் விடுவார்கள். எனவே அவர்கள் கொட்டம் அடங்கும் வரை நம் பணத்தையும் நகைகளையும் எங்கேயாவது பூமிக்குள் புதைத்து வைப்பது நல்லது தானே'' என்றான்.

சின்னப்பனும் ''அப்படிப்



புதைத்து வைத்தால் நம் இரும்புப் பெட்டி காலியாக இருக்கும். கொள்ளைக்காரர்கள் வந்து இரும் புப் பெட்டியில் எதுவும் இல்லாத தைக் கண்டு நம்மை அடித்துத் துன் புறுத்தி பணத்தை எங்கே ஒளித்து வைத்தாய் என்று கேட்பார்கள். எனவே நீ கூறுவது போலச் செய்வது சரியல்ல'' என்றான்.

கொஞ்ச நாட்களுக்குப் பின் ஜமீன் தாரர் சிங்கராயரின் தாயாருக்குக் கடும் நோய் கண்டது. அவள் இனிப் பிழைக்க மாட்டாள் என்றே எல் லோரும் நினைத்தார்கள். ஆனால் எழுபத்தைந்து வயதான அந்தக் கிழவி பூரண குணமடைந்து விட்டாள். இதை மகிழ்ச்சியுடன் கொண்டாட ஜமீன்தாரர் பல சிறப்பு நிகழ்ச்சி களுக்கு ஏற்பாடு செய்திருந்தார். அவற் றைக் கண்டு களிக்க சுற்றுப் புறத்து கிராம மக்கள் நடந்தும் வண்டிகளி லும் சென்றனர். ஜமீன்தாரரின் ஆட் கள் அவர்களை வரவேற்று அவர் களது அந்தஸ்திற்குத் தக்கபடி தங்க இடவசதி செய்து கொடுத்து உபசரிக் கலானார்கள்.

கண்ணப்பன் சின்னப்பனிடம் ''நீங்கள் குதிரை வண்டியில் ஜமீன் தாரரின் வீட்டிற்குப் போனால் உங்கள் அந்தஸ்திற்கு ஏற்ப மரியாதையும் உப சரிப்புகளும் கிடைக்குமே'' என்றான். சின்னப்பனும் ''நான் குதிரை வண்டி யில் போனால்தான் எனக்கு உயரிய மரியாதை கிடைக்கும் என்றால் எனக்கு அப்படிப்பட்ட மரியாதை வேண்டாம். பெரிய இடத்துச் சிநே கிதம் கத்தி முனையில் நடப்பதற்கு சமம். அவர்களிடமிருந்து விலகி இருப்பதே நல்லது. அதனால் நடந்தே போய் சாதாரண மக்களுக்குக் கிடைக் கும் உபசரிப்பைத்தான் நான் ஏற் பேன்'' என்றான்.

அப்போது கண்ணப்பன் ''நாம் நடந்து போய் விடலாம். ஆனால் நம் வீட்டுப் பெண்டு பிள்ளைகளை எப் படி அழைத்துப் போவது? அவர் களும் நடந்தா செல்வார்கள்?'' என்று கேட்டான். சின்னப்பனும் ''அவர் களை எல்லாம் அழைத்துக் கொண்டு அங்கே ஏன் நாம் போக வேண்டும்? நாம் மட்டும் நடந்து சென்றால் போதுமே'' என்றான்.

அப்போது கண்ணப்பன் ''நான் என் வீட்டிலுள்ளவர்களை எல்லாம் அழைத்துக் கொண்டு ஜமீன்தாரர் ஏற்பாடு செய்துள்ள வேடிக்கை களைப் பார்க்கப் போக நினைக்

கிறேன். நீங்கள் என் அடுத்த வீட்டுக் காரர். உங்கள் வீட்டிலுள்ளவர்கள் வந்தாலே எங்கள் வீட்டிலும் வருவார்களாம். நீங்களோ உங்கள் வீட்டில் யாரையும் அழைத்துப் போகாமல் நடந்தே செல்லப் போவதால் நானும் என் வீட்டில் யாரையும் அழைத்துக் கொள்ளாமல் உங்களோடு வருகிறேன்'' என்றான்.

இதன்படியே கண்ணப்பனும் சின்னப்பனும் குறிப்பிட்ட நாளில் ஜமீன்தாரரின் ஊரை அடைந்தார்கள். அங்கு மக்கள் கூட்டம் அதிகமாக இருந்தது. வேடிக்கைகளைக் காணப் பலர் முண்டி அடித்துக் கொண்டு சென்றதால் கூட்டத்திலிருந்த பெண்களும் குழந்தைகளும் நெரிசலில் அகப்பட்டு அவஸ்தைப் பட்டார்கள். சிலரைக் கூட்டத்தவர் தள்ளி மிதித்தனர். இன்னும் சிலருக்கு தொற்று நோய் பரவ மருத்துவமனைக்குக் கொண்டு செல்லப்பட்டனர். வந்த மக்களுக்குக் கிடைத்த மரியாதைகளை விட ஜமீன்தாரருக்குத்தான் ஏராளமாய் பரிசுகளும் பணமும் கிடைத்தன!

இதையெல்லாம் கண்ட சின்னப்பனும் கண்ணப்பனும் இனியும் அங்கே இருந்தால் சிரமப்பட வேண்டுமென எண்ணி உடனேயே தம் ஊருக்குத் திரும்பி வந்தார்கள். அவர்கள் தம் ஊரை அடைந்த போது நள்ளிரவாகி விட்டது. அப்போது அவ்வூரில் ஒரே சத்தமும் குழப்பமுமாக இருந்தது. கொள்ளைக்காரர்கள் திடீரென வந்து தாக்குதல் நடத்தினார்களாம்.

அவர்கள் ஒரு வீட்டிற்குப்போய் அவ்வீட்டு இரும்புப் பெட்டி காலியாக இருப்பது கண்டு ஆத்திரப்பட்டு



அந்த வீட்டிலுள்ளவர்களை எல்லாம் அடித்துத் துன்புறுத்தினார்களாம். அங்கிருந்து கண்ணப்பனின் வீட்டிற்குப் போனார்களாம். அவனது வீட்டு இரும்புப் பெட்டியில் பத்தாயிரம் ரூபாய் இருப்பதைக் கண்டு அதை எடுத்துக் கொண்டு வீட்டில் இருந்தவர்களைத் துன்புறுத்தாமல் அங்கிருந்து வெளியே வந்தார்களாம். அவர்களை அவ்வூர் இளைஞர் பாதுகாப்புப் படை பார்த்துப் பிடித்ததோடு கண்ணப்பனின் வீட்டில் கொள்ளைக்காரர்கள் எடுத்த பணத்தை அவன் வீட்டாரிடம் ஒப்படைத்தார்களாம்.

இதையெல்லாம் கேட்ட சின்னப்பன் கண்ணப்பனைப் பார்த்து ''நீங்கள் அதிர்ஷ்டசாலிதான்'' என்றான். அப்போது கண்ணப்பன் ''இது என் அதிர்ஷ்டத்தால் அல்ல, அறிவால்

கிடைத்தலாபம்'' என்றான். சின்னப்பனும் ''அறிவாலா? எந்த யோசனையையும் நீங்கள் என்னிடம் உருப்படியாகக் கூறியது இல்லை. அதனால் இது உங்கள் அதிர்ஷ்டத்தாலேயொழிய அறிவால் அடைந்த பயன் அல்ல'' என்றான்.

அப்போது கண்ணப்பன் ''நான் உங்களுக்கு யோசனை கூறுவது போலக் கூறி எனக்கு லாபத்தையே தேடிக்கொண்டேன். நான் உங்களுக்கு யோசனை கூறுவதாக நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். ஆனால் உண்மையில் நீங்கள்தாம் எனக்கு யோசனை கூறினீர்கள். நான் வட்டிக் கடை வைக்க எண்ணினேன். நீங்கள் அது வேண்டாம் என யோசனை கூறினீர்கள். என் மாப்பிள்ளையை வீட்டோடு வைத்துக் கொள்ளலாமென நான் நினைத்தேன். அது பெருந் தவறு என விளக்கிக் கூறினீர்கள். கொள்ளைக்காரர்களின் தொல்லைகளுக்கு ஆளாகாமல் இருக்க இரும்புப் பெட்டியில் பணம் இருப்பதே சரி என்று கூறினீர்கள். ஜமீன்தாரரின் சிறப்பு நிகழ்ச்சிகளைக் காணக் குடும்பத்தவரை எல்லாம் அழைத்துக் கொண்டு போகக் கூடாது என்றும் நாம் மட்டும் நடந்தே செல்ல வேண்டும் என்ற நல்ல யோசனையையும் கூறினீர்கள். இவ்வளவு யோசனைகளையும் நான் உங்களிடமிருந்து தெரிந்து கொண்டது என் புத்திசாலித்தனத்தால்தானே. யாருக்கும் யோசனைகளையும் அறிவுரைகளையும் கூறக்கூடாது என உறுதி கொண்டிருந்த நீங்களே பல சமயங்களில் எனக்குப் பல யோசனைகளையும் அறிவுரைகளையும் கூறி இருக்கிறீர்கள்'' என்றான்.

சின்னப்பன் அது கேட்டு திடுக்கிட்டு ''ஆம். உண்மையிலேயே நீங்கள் அறிவாளிதான். இவ்வளவு நாட்களாக எனக்குத் தெரியாமலே என்னிடமிருந்து யோசனைகளையும் அறிவுரைகளையும் கேட்டு வாங்கி விட்டீர்கள். என் அறிவுரைகள் பிறருக்குப் பயன்படும் என்பதையும் நிரூபித்துவிட்டீர்கள். இனிமேல் யார் என்னிடம் வந்து யோசனை கேட்டாலும் எனக்குத் தெரிந்ததைக் கூறுவேன்'' என்றான்.

கண்ணப்பனும் அது கேட்டு மகிழ்ந்து நின்றான்.





# லஞ்சமோ லஞ்சம்!

மலயகிரி என்ற நாட்டில் லஞ்சம் என்பது சர்வ சாதாரணமாகி விட்டது. கடை நிலை அரசாங்க ஊழியனிலிருந்து உயர்பதவியிலுள்ள அதிகாரிகள் வரை கூசாமல் லஞ்சம் வாங்கிக் கொண்டே இருந்தார்கள். இப்படி லஞ்சப் பேய் தன் நாட்டில் தாண்டவம் புரிவதைச் சகிக்காத மன்னன் தன் முதலமைச்சரை அழைத்து "இன்றிலிருந்து பதினைந்து நாட்களுக்குள் நம் நாட்டிலிருந்து லஞ்சப் பேயை விரட்டி விட வேண்டும். அதற்குப் பின் யாருமே நம் நாட்டில் லஞ்சமே வாங்காமல் பார்த்துக் கொள்ள வேண்டியது உம் கடமை. இப்போது அதிகாரிகள் லஞ்சம் வாங்குகிறார்கள் என்று தினமும் ஒற்றர்கள் வந்து கூறுகிறார்கள். இனியும் அவர்கள் அவ்வாறு என்னிடம் கூறக் கூடாது" என்றான்.

மறுநாளே முதலமைச்சர் எல்லா அரசாங்க அதிகாரிகளையும் ஊழியர்களையும் கூட்டி இனிமேல் லஞ்சம் வாங்குவதில்லை என்று சத்தியப் பிரமாணம் செய்யச் சொன்னார். அவர்களும் அப்படியே செய்தார்கள். ஆனால் அதற்குப் பிறகும் அதிகாரிகளும் ஊழியர்களும் லஞ்சம் வாங்கிக் கொண்டேதான் இருந்தார்கள்.

இந்த நிலை கண்டு முதலமைச்சர் கவலையில் ஆழ்ந்தார். அவர் கவலைப்படுவதைக் கண்ட அவரது மனைவி "ஏன் இப்படி இருக்கிறீர்கள்? உங்களுக்கு என்ன கவலை?" என்று கேட்டாள். முதலமைச்சரும் மன்னனின் கட்டளையைக் கூறி "இன்று பதிநான்காவது நாள். நாளை மன்னனிடம் என்ன பதில் சொல்வது என்று தெரியாமல் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறேன்" என்றார்.

அதைக் கேட்ட அவரது மனைவி "பூ! இவ்வளவுதானா? இதற்கு நான் சொல்கிறபடி செய்யுங்கள். பிரச்னை தீர்ந்து விடும்" என்று கூறி அவர்

—கி. சுதா—

காதில் இரகசியமாக ஏதோ சொன் னாள். முதலமைச்சரும் ''நல்ல யோசனையே'' எனறு கூறி தன் மனைவி கூறிய யோசனைப்படியே செய்து விட்டார்.

பதினைந்தாவது நாள் அவர் மன்னனைக் காணச் சென்றார். மன்ன னும் மகிழ்ச்சியுடன் அவரை வர வேற்று ''ஆகா! உங்கள் திறமையை என்னென்பது! இவ்வளவு நாட்களாக நாட்டைப் பிடித்துக் கொண்டிருந்த லஞ்சப் பேயை எப்படி விரட்டினீர் கள்? ஏதோ மாயாஜாலம் போல நடந் திருக்கிறதே. என் ஒற்றர்கள் நேற்றிரவு வந்து நாட்டில் லஞ்சம் ஒழிந்து விட் டது என்று கூறியதும் என் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லாது போயிற்று. உமக்கு எம் பாராட்டுக்கள்'' என்று கூறி அவருக்குப் பரிசளித்து 'தேச ரத் தினம்' என்ற பட்டமும் அளித்தான்.

முதலமைச்சர் மகிழ்ச்சியுடன் தன் வீட்டிற்குத் திரும்பி வந்தார். அவர் தம் மனைவியிடம் ''நீ கூறியபடி மன்னனுக்குத் தகவல் கொடுக்கும் ஒற்றர்களுக்கு நிறைய லஞ்சம் கொடுத்து நான் சொன்னதை அப் படியே மன்னனிடம் சொல்ல வேண்டுமெனக் கூறினேன். அவர் களும் நான் கொடுத்த பணத்தை வாங் கிக் கொண்டு அவ்வாறே செய்தார்கள். மன்னரும் அவர்கள் கூறியதைக் கேட்டு நாட்டில் லஞ்சம் ஒழிந்து போய் விட்டதாக எண்ணி மகிழ்ந்து என்னைப் பாராட்டிப் பரிசளித்து கௌரவித்தும் விட்டார். நான் ஒற்றர் களுக்குப் பணம் கொடுக்க என் கீழுள்ள அதிகாரிகளிடம் லஞ்சம் கேட்டேன். அவர்கள் தம் கீழுள்ள அதிகாரிகளிடமிருந்து லஞ்சம் கேட்டு நான் கேட்ட பணத்தைக் கொடுத்திருக் கிறார்கள்'' என்றார்.

அவரது மனைவியும் ''நாட்டில் ஏன் எல்லோரும் லஞ்சம் வாங்கு கிறார்கள் என்று யோசித்தீர்களா? ஆட்சி புரியத் தெரியாத மன்னன் இருக் கும வரை அதிகாரிகளும் மற்ற ஊழி யர்களும் லஞ்சம் வாங்கிக் கொண்டு தான் இருப்பார்கள்'' என்றாள்.

முதலமைச்சரும் ''ஆம் இங்கு லஞ் சம் சர்வ சாதாரணமாகி விட்டது. எல்லோரும் இதற்குப் பழக்கப் பட்டு விட்டார்கள். அதனால்தான் நாடு பாழாகிக் கொண்டிருக்கிறது'' என் றார் கவலைப்பட்டவாறே.





# மாமன்னர் அசோகர்

## 6

(மௌரிய சக்கரவர்த்தி பிந்துசாரரின் உடல் நலம் குன்றி இருந்த போது தட்ச சீலத்தில் கலகங்கள் மூண்டன. பிந்துசாரர் தன் மூத்த மகன் சுசிம்மனை அங்கு போகச் சொன்னான், அவன் அதற்குச் சம்மதியாததால் சக்கரவர்த்தியின் கடைசி மகனான அசோகன் சிறிது படையுடன் தட்ச சீலம் சென்று கலகக்காரர்களை அடக்கிவிட்டுத் தலை நகருக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தான். வழியிலே அவனைக் கொல்ல சுசிம்மன் திட்டம் தீட்டியும் அது வெற்றி பெறவில்லை. அப்போது–)

தலைநகரின் எல்லையில் நடந்த விபத்தை பிரதம மந்திரி பிந்து சாரரிடம் கூறவே அவரும் ''கொடிய விபத்தா நடந்தது? அசோகனின் உயிருக்கு ஆபத்து இல்லையே? அவனது வெற்றி பற்றி விவரமாகக் கூறப் போகிறீர்களென்று நான் எதிர் பார்த்துக் கொண்டிருந்தேன். ஆனால் விபத்து பற்றிய செய்தியைக் கொண்டு வந்திருக்கிறீர்கள்'' என்றார்.

அதற்கு பிரதம மந்திரி பதில் எதுவும் கூறாதிருக்கவே பிந்துசாரரும் ''தட்சசீலத்தின் கலகக்காரர்களை ஆதரிக்கும் சிலர் இங்கும் இருக்கிறார்கள் என்பது தெளிவாகிறது. அவர்கள் தான் இங்கு அசோகனைத் தாக்கி இருக்கிறார்கள் என்று நினைக்கிறேன் நீங்கள் என்ன எண்ணுகிறீர்கள்?'' என்று கேட்டார்.

பிரதம மந்திரியும் ''ஆற்றின் கரையிலிருந்த பாறாங்கற்களை உருட்டி விட்ட கயவர்களில் சிலர் பிடிபட்டு



இச் சம்பவத்தில் யாரோ முக்கிய மானவர் சம்பந்தப்பட்டிருக்கிறார் என்று நீங்கள் சந்தேகிக்கிறீர்களா?'' என்று கேட்டார். பிரதம மந்திரியும் ஆமெனக் கூறவே பிந்துசாரர் ஒரு நிமிடம் திகைத்து போனார். விசாரணையில் எத்தகைய ரகசியம் வெளிப் படும் என்று எண்ணலானார்.

இச்சமயத்தில் நகரக் காவலதிகாரி வந்து பிந்துசார மன்னரையும் பிரதம மந்திரியையும் வணங்கினார். மன்னரும் அந்த அதிகாரியிடம் ''உம் விசாரணை முடிந்து விட்டதா? அது எதிர் பாராது நேர்ந்த விபத்துதானே?'' என்று கேட்டார். அதிகாரியும் ''இல்லை பிரபுவே! நதிக்கரையிலிருந்த் கற்களை ஆட்டி அசைத்து அவற்றின் கீழ் மரப் பலகைகள் சொருகி வைக்கப்பட்டிருந்தன. அந்தப்பலகைகளைப் பின்புறத்திலிருந்து குறிப்பிட்ட சமயத்தில் உருவி விட்டதும் பாறாங்கற்கள் உருண்டு அப்போது அவ்வழியே வந்து கொண்டிருந்த நம் படை வீரர்கள் மீது விழுந்தன. இம்மாதிரிப் பலகைகளைச் சொருக நன்கு திட்டமிட்டிருக்கப்பட்டிருக்கிறது. இதற்குக் குறைந்தது நூறு ஆட்களையாவது சதிகாரர்கள் பயன்படுத்தி இருக்க வேண்டும்'' என்றார்.

அதைக் கேட்ட பிந்துசாரர் ''சதியா? நம்பத் தகுந்ததாக இல்லையே. நம் படைத் தளபதிகளில் ஒருவனும் சில வீரர்களும் அங்கேயுள்ள பூங்காவில்தானே இருந்தார்கள்? இந்தச் சதிகாரர்களின் அவ்வளவு ஆட்களும் அவர்களது பார்வையில் படாமலா இந்த வேலையைச்செய்தார்கள்?'' என்று கேட்டார்.

உள்ளார்கள். நம் நகரப் பாதுகாப்பு அதிகாரி அவர்களை விசாரித்துக் கொண்டிருக்கிறார். அவர் விரைவில் இங்கு வருவார்'' என்றார்.

சக்கரவர்த்தியும் ''ஓ! அசோகனைக் கொல்ல வேண்டும் என்பதற்காக சிலர் பாடலிபுத்திரத்தில் இருக்கிறார் என்று தங்களுக்குத் தெரிந்திருக்கிறது போலிருக்கிறதே. கூறுங்கள் அவர்கள் யாரென்று? அவர்களைப் பிடித்துக் கடுமையாக தண்டிக்கிறேன்'' என்றார்.

பிரதம மந்திரியும் ''எனக்கு ஓரளவு அவர்கள் யாரெனத் தெரியும் என்றாலும் உறுதியாகக் கூற முடியவில்லை. அதற்காகத்தான் காவலதிகாரியின் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்'' என்றார்.

சக்கரவர்த்தியும் ''அப்படியானால்

காவலதிகாரியும் ''நம் படைத்தளபதி களில் ஒருவன்தான் இந்தச் சதிக்கு உதவி இருக்கிறான்'' என்றார்.

அது கேட்டு பிந்துசாரர் ''ஆ! என்ன துரோகச் செயல்! இப்படிப்பட்ட துரோகி ஒருவன் நம் படையில் இருப் பது இது நாள் வரை யாருக்குமே தெரியவில்லையா?'' என்று கோபத்து டன் கேட்டார் அந்த அதிகாரியும்'' மௌரிய சாம்ராஜ்யத்தின் அரியா சனத்தில் அமரத் துடிக்கும் இளவர சனே அப்படைத் தளபதிக்கு லஞ்சம் கொடுத்து இத்தகைய செயலைச் செய்யுமாறு கூறும் போது அந்தத் தளபதி வேறு என்ன செய்வான்?'' என்று வேதனையுடன் கூறினான்.

மன்னர் திடுக்கிட்டு ''இளவரசன் லஞ்சம் கொடுத்தானா?'' என்று கேட்கவே அதிகாரியும் ''பிரபுவே! என்னை மன்னியுங்கள். விசாரணை யின் போது வெளிவந்த விஷயங் களைத்தான் நான் கூறினேன். என் கடமை விசாரித்து உண்மை அறிந்து அதற்கேற்ப செயல்பட வேண்டியது. எனவே அவ்வாறு நடந்ததில் நான் அறிந்து கொண்டதையே கூறினேன்'' என்றான்.

அதைக் கேட்ட மன்னர் சற்று யோசித்து விட்டு ''நான் உம்மை முழுவதுமாக நம்புகிறேன். நீர் உமது கடமை தவறாமல் நடந்து வருவது கண்டு மிகவும் மகிழ்ச்சி அடை கிறேன்'' என்றார். அப்போது அந்த அதிகாரி ''தங்களிடம் இந்த விஷ யத்தை எப்படிக் கூறுவது என்று கொஞ்சம் தயங்கினேன். ஆனால் என் கடைமை உணர்ச்சி எனக்கு அறி வுறுத்தியதால் இதைத் தங்களிடம்



கூறினேன். இதில் தவறு இருந்தால் என்னை மன்னிக்கவும்'' என்றான்.

அதுவரை அவர்களிருவரும் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டுக் கொண்டிருந்த பிரதம மந்திரி நகரக் காவலதிகாரியிடம் ''இன்னொரு விஷயம் கூறப் போகிறேன். சற்றும் தயங்காமல் நீ அதைச் செய்ய வேண் டும். நம் மன்னருக்காகவும் நம் நாட் டிற்காகவும், மௌரிய வம்சத்தின் கௌரவத்திற்காகவும் இந்த இரக சியம் யாருக்கும் தெரியாதிருக்கச் செய்ய வேண்டும். நீ சிறைப் படுத்தி வைத்துள்ள ஒருவன் கூட வாய் திறந்து இந்த ரகசியத்தை யாரிடமும் கூறக் கூடாது. ஆம். படைத்தளபதியையும் சேர்த்துதான் கூறுகிறேன். இதற்கு என்ன செய்ய வேண்டுமென்று உனக்குப் புரிந்திருக்க வேண்டுமே''

என்றார்.

காவலதிகாரிக்கு பிரதம மந்திரி என்ன எண்ணி இப்படிக் கூறினார் என்பது புரிந்து விட்டது. அதைக் கேட்டு திடுக்கிட்டாலும் அவ்வாறு செய்வது தன்கடமை என்று உணர்ந்து மன்னர் என்ன சொல்லப் போகிறார் என்று எதிர்பார்க்கலானான்.

மன்னரும் ''ஆம். பிரதம மந்திரி கூறுவது சரியே. அவர்களில் ஒருவன் கூட வாய் திறந்து பேசக் கூடாது. அதுவும் இன்றிரவுக்குள் எல்லாம் நடந்து முடிய வேண்டும்.'' எனவே காவலதிகாரியும் ''அவர்கள் நூறு பேர்களுக்கும் மேல் இருப்பார்களே!'' எனக் கூறினான். பிரதம மந்திரியும் ''இருக்கட்டுமே. நாளைக் காலை சூரியோதத்தை அந்தப் படைத் தளபதியும், அவனது அந்த ஆட்களும் பார்க்கக் கூடாது. அதன் பின் காலையில் தட்சசீலத்தில் கலகங்களை வெற்றிகரமாக அடக்கி விட்டுத்திரும்பி வந்து கொண்டிருந்த இளவரசரைக் கொல்லச் சதி செய்தவர்கள் பிடிக்கப்பட்டுத் தூக்கு தண்டனை பெற்றார்களெனப் பறை சாற்றி நகரில் அறிவிக்கப்பட வேண்டும்'' என்றார்.

காவலதிகாரி பேச முடியாமல் விழிக்கவே பிரதம மந்திரியும் ''ஏன் திகைக்கிறாய்? நம் நாட்டின் நலனுக்காக இந்த நூறு பேர்களல்ல, ஆயிரம் பேர்களாக இருந்தாலும் தயங்காமல் தூக்கில் போடத் தயாராக இருக்க வேண்டும். நம் அரச குமாரர்கள் சுசிம்மனுக்கும் அசோகருக்குமிடையே வெறுப்பும் பகைமையும் உள்ளதென வதந்திகள் கிளம்பிப் பலரும் பலவாறாகப் பேசக் கூடாது. இப்போது சிறைப்பட்டவர்களில் ஒருவன் தப்பித்து விட்டால் கூட அவன் வாயிலாக விஷயம் வெளிப்பட்டு விடும். எனவே ஒருவனைக் கூட விட்டு விடக் கூடாது. ஜாக்கிரதை'' என்றார்.

காவலதிகாரியும் ''உங்கள் கட்



டளைப்படியே நடக்கிறேன். இன்றிரவு பனிரெண்டு மணிக்கு சதிகாரர்கள் அனைவரும் தூக்கிலிடப்பட்டு விடுவார்கள்அதை நான்நிறைவேற்றுகிறேன்'' எனக் கூறி மன்னரை வணங்கி அவரிடமும் பிரதம மந்திரியிடமும் விடை பெற்றுக் கொண்டு சென்றான்.

வழியில் அவனுக்கு எதிரில் அரச குமாரன் சுசிம்மன் அவனை நிறுத்தி ''யாரோ படைத் தளபதி அசோகனைக் கொல்ல முயன்றதோடு அந்தச் சதிக்கு எனக்கும் தொடர்பு இருப்பதாகக் கூறினானாமே. இது உண்மையா?'' என்று கேட்டான். காவலதிகாரியும் ''ஆமாம். அவன் அப்படித்தான் சொல்லிக் கொண்டிருக்கிறான்'' என்றான். அதற்கு சுசிம்மன் ''அது முழுப் பொய். இப்படிப் பொய் சொன்னவனைத் தூக்கில் போட வேண்டும்'' என்றான்.

அதைக் கேட்ட காவலதிகாரி திடுக்கிட்டாலும் இப்படி இரட்டை வேஷம் போடுபவனா நாட்டின் வருங்கால மன்னன் என்று மனதிற்குள் எண்ணி வேதனைப் பட்டான். அப்போது சுசிம்மன் ''அந்தப் படைத் தளபதி கூறிய பொய் மன்னருக்குத தெரியுமா?'' என்று கேட்டான். அதிகாரியும் ''அதைத் தெரிவிப்பது என் கடமை. தெரிவித்தும் விட்டேன். ஆனால் அதை அவர் நம்பினாரா அல்லது இல்லையா என என்னால் கூற முடியாது. ஒரு விஷயம் மட்டும் கூற முடியும். படைத் தளபதிக்கும் அந்த சதிகாரர்களுக்கும் மன்னர் மரண தண்டனை விதித்து விட்டார்'' என்றான்.

சுசிம்மனும் ''சரியான தீர்ப்புதான். நான் மன்னனாக இருந்திருந்தாலும் இப்படித்தான் தீர்ப்பு கூறி இருப்பேன்'' என்று சந்தோஷத்தோடு கூறினான். காவலதிகாரிக்கு ஒரே எரிச்சலாக இருந்தது. ஆனால் அதை





மன்னரைப் பார்த்து விட்டு வரு கிறேன்'' என்றார். அப்போது சுசிம் மன் ''நானும் மன்னரைப் பார்க்கத் தான் போய்க் கொண்டிருக்கிறேன். இருவரும் சேர்ந்தே போகலாம்'' என்று கூறி அவரோடு சேர்ந்து சென் றான். மன்னர் அவர்களைக் கண்ட தும் ''சரி. முக்கியமான மூன்று பேர் கள் இப்போது என் முன் இருக்கிறீர் கள். உங்களிடம் ஒரு முக்கியமான விஷயம் கூற வேண்டும்'' என்றார்.

மூவரும் அங்கிருந்த ஆசனங்களில் அமர்ந்தனர். சில நிமிடங்களுக்குப் பின் மன்னர் சுசிம்மனைப் பார்த்து ''நான் கேள்விப்பட்டதை நம்ப வில்லை, மகனே'' என்றார். சுசிம்ம னும் ''நீங்கள் என்ன கேள்விப்பட் டீர்கள் என்பதே எனக்குத் தெரி யாதே'' எனக் கூறினான். மன்னரும் ''இப்படி நீ கூறுவதையும் நான் நம்ப வில்லை. நான் என்ன கேள்விப்பட் டேன் என்பது உனக்கு நன்கு தெரியும். அதை நான் கூற விரும்பவில்லை. காலப் போக்கில் அது தெரிய வரும். சரி. நம் மாநிலங்களில் ஒன்றான அவந்தியின் தலைநகரான உஜ்ஜயி னிக்கு அரசகுமாரர்களில் ஒருவனை என் பிரதிநிதியாக இருக்க அனுப்ப வேண்டுமென்று பிரதம மந்திரியும் சேனாதிபதியும் அபிப்பிராயப்படு கிறார்கள். நீயோ அல்லது அசோ கனோதான் அப்பதவிக்கு ஏற்றவன். ஆனால் இப்போதெல்லாம் நீங்கள் இருவரும் அடிக்கடி மோதிக் கொள்வ தால் இருவரும் சற்று தூரத்தில் விலகி இருப்பதே நல்லது என நான் நினைக் கிறேன்'' என்றார்.

சுசிம்மன் எதுவும் கூறாதிருக்கவே

வெளிப்படுத்தாமல் தலையை மட் டும் ஆட்டினான். அப்போது சேனாதி பதி மன்னரைக் காணச் சென்று கொண்டிருந்தார். அவர் சுசிம்மனைப் பார்த்து வணங்கி நிற்கவே காவலதி காரியும் அவரை வணங்கி ''ஐயா! நான் தங்களைக் காணவே வந்து கொண்டிருக்கிறேன்'' என்றான்.

சேனாதிபதியும் ''அப்படியா? இப் போது நான் மன்னரைப் பார்க்கப் போய்க் கொண்டிருக்கிறேன். நான் அவரிடம் பேசி விட்டு வரும் வரை இங்கேயே இரு. ஏதாவது முக்கிய மான விஷயமா?'' என்று கேட்டான். காவலதிகாரியும் ''ஆம். ஆயினும் நீங் கள் வரும் வரை இங்கேயே காத்து நிற்கிறேன்'' என்றான்.

அப்போது சேனாதிபதி அந்த அதி காரியிடம் ''நீ இங்கேயே இரு. நான்

மன்னர் ''நீ உஜ்ஜயினிக்குப் போகிறாயா?'' என்று கேட்டார். அவன்தான் தலை நகரிலேயே இருக்க விரும்புவதாகக் கூறவே மன்னரும் ''என் மூத்த மகன் என்றதால் என் பிரதிநிதியாக உன்னை உஜ்ஜயினிக்கு அனுப்ப விரும்பினேன். சரி. நான் அசோகனை அங்கு அனுப்புகிறேன். அவன் என் பேச்சைக் கேட்பான். நீ இனிப் போகலாம்'' என்று கூறி அவனை அங்கிருந்த அனுப்பி விட்டார்.

சுசிம்மனுக்கு ஆத்திரமாக வந்தது மன்னர் தன்னை இளவரசன் எனக் குறிப்பிடாமல் மூத்த மகன் என்று ஏன் சொன்னார் என்று யோசித்தவாறே சென்றான். -

சிறைச் சாலையிலிருந்த படைத் தளபதி நகரக் காவலதிகாரியிடம் ''என்னை ஒரு தடவை இளவரசர் சுசிம்மரிடம் அழைத்துப் செல்லுங்கள் அவரே நான் குற்றமற்றவன் என்று உங்களிடம் கூறுவார்'' என்று கூறினான். காவலதிகாரியோ ''இளவரசர் தான் உனக்கு மரண தண்டனை அளிக்க வேண்டுமெனக் கூறிவிட்டார். அதனால் பேசாமல் மற்ற கைதிகளுடன் கொலைக் களத்திற்கு வா'' என்றான்.

படைத் தளபதியோ ''இளவரசரா அப்படிக் கூறினார்?'' என்று கேட்கவே அதிகாரியும் ''ஆமாம். நீ அவரைச் சதிகாரர்களுடன் சம்மந்தப் படுத்திக்கூறியது முழுப் பொய் என்று கூறுகிறார்'' என்றான். படைத் தளபதியோ ''அட பாவி! நீ அழிந்துதான் போவாய். நான் சொன்னதா பொய்? நீ தானே எங்களை இப்படிச் செய்யும் படிக் கூறினாய். நீ நாசமாய்ப் போக!'' என்று சுசிம்மனைக் கண்டபடி திட்டினான்.

காவலதிகாரியும் ''இப்போது அவரைத் திட்டுவதால் எவ்விதப் பயனும் இல்லை. நீ அவரிடம் லஞ்சம் வாங்கிக் கொண்டு இச் செயலைச் செய்யுமுன் நன்கு யோசித்திருக்க வேண்டும். இப்போது அவர் உன்னைக் கைவிட்டு விட்டார்'' என்றான்.

காவலதிகாரி படைத் தளபதியையும் மற்ற சதிகாரர்களையும் கொலைக் களத்திற்கு அழைத்துச் சென்றான். கொலையாளிகள் தம் வாட்களால் அவர்களது தலைகளை வெட்டித் துண்டாக்கினார்கள்.

(தொடரும்)






# உயர்ந்த குணம்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதைச் சுமந்து கொண்டு அவன் மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! நீ இந்த நள்ளிரவில் சுக போகங்களை எல்லாம் விட்டுவிட்டு இப்படி சிரமப் படுவதைப் பார்த்தால் நீ பிடிவாதமாய் இச் செயலில் இறங்கி இருக்கிறாய் என்றே தெரிகிறது. சில சமயம் இந்த மாதிரிப் பிடிவாதம் அறிவை மயக்கி எது முடியும், எது முடியாது என யோசிக்க விடாமல் செய்து விடும். இதற்கு உதாரணம் உலகநாதன். அவன் நிறையப் பணம் சம்பாதிக்க வேண்டுமெனப் பிடிவாதம் கொண்டு செயலில் இறங்கினான். ஆனால் அவன் தனக்குக் கிடைத்த வாய்ப்புகளை சரிவரப் பயன்படுத்

## வேதாளம் சொல்லும் கதை



திக் கொள்ளாமல் இருந்துவிட்டான். அவனது கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

உப்பங்காட்டில் உலகநாதன் என்பவன் மிகவும் நல்லவனெனப் பெயர் பெற்றவன் அவ்வூரார் யாவரும் அவனை பெரிதும் விரும்பினார்கள். உலகநாதனுக்கு தான் நிறையப் பணம் சம்பாதித்துப் பெரிய மனிதனாகிவிட வேண்டுமென்ற ஆசை ஏற்பட்டது. ஏதாவது ஒரு துறையில் சிறந்து விளங்கினால் நிறையப் பணம் சம்பாதித்து விடலாம் என எண்ணி அவன் இலக்கியத் துறையைத் தேர்ந்தெடுத்தான்.

அந் நாட்டிலேயே பெரிய பண்டிதர் எனக் கருதப்படும் கிருஷ்ணபட்டர் அதே ஊரில் இருந்தார். உலகநாதன் அவரிடம் சென்று தான் இலக்கியம் கற்க விரும்புவதாகக் கூறவே அவரும் ''நான் உன் தகுதியை ஒரு வார காலம் பரீட்சித்துவிட்டு பிறகு உன்னை என்னுடைய மாணவனாக ஏற்பது பற்றிக் கூறுகிறேன். அதுவரை நீ என்னுடனேயே இரு'' என்றார்.

உலகநாதனும் ஒருவார காலம் கிருஷ்ண பட்டர் வீட்டில் இருந்து அவர் கற்பிப்பதைக் கேட்டான். ஒரு வாரமானதும் அவர் அவனிடம் ''உனக்கு இலக்கியத் துறை ஏற்றது இல்லை. உன் குரல் நன்றாக இருப்பதால் நீ இசையைக் கற்றுப் பணமும் பெயரும் சம்பாதி. நான் இசை உலகச் சக்கரவர்த்தி என்று பெயர் பெற்ற கமலாபுரம் கந்தசாமி பாகவதருக்கு ஒரு கடிதம் எழுதித் தருகிறேன். நீ அவரிடம் இசை பயின்று கை நிறையப் பணம் சம்பாதி'' எனக் கூறி அவனைக் கமலாபுரத்திற்கு அனுப்பினார்.

அவனும் கமலாபுரம் போய் கந்தசாமி பாகவதரைக் கண்டு கிருஷ்ண பட்டர் கொடுத்த சிபாரிசுக் கடிதத்தைக் கொடுத்தான் அவரும் அதைப் படித்துவிட்டு ''சரி. நீ ஒரு வாரம் என்னோடு இருந்து பாடு. பிறகு உன்னை என் சீடனாக ஏற்பது பற்றி முடிவு கூறுகிறேன்'' என்றார். உலகநாதனும் அவரோடு இருந்து ஒருவார காலம் பாடினான். வார முடிவில் அவர் ''உனக்குக் குரல் வளம் உள்ளது. ஆனால் இசை ஞானம் வராது. உன் கை விரல்கள் நீளமாக உள்ளன. நீ ஒரு நல்ல ஓவியனாகலாம். எனவே சிறந்த ஓவியரான சிவசாமியைப் போய்ப் பார்'' எனக் கூறி அந்த ஓவியர் இருந்த சிங்கபுரத்திற்கு அனுப்பினார்.

உலகநாதன் சிங்கபுரம் போய் சிவசாமியைக் கண்டான். அவரும் அவனை ஒரு வாரகாலம் தன்னோடு வைத்துப் பார்த்துவிட்டு ''உனக்கு ஓவியக் கலையில் சிறந்து விளங்க வாய்ப்பே இல்லை. நீ இலக்கியங்களைப் படி. உனக்குக் கற்பனை வளம் பெருகும். நீ உப்பங்காட்டு கிருஷ்ண பட்டரிடம் போய் இலக்கியம் கற்றுக் கொள்'' என்று கூறி அனுப்பிவிட்டார்.

மூன்று பெரியவர்களும் இப்படிக் கூறியதால் மனம் உடைந்து போய் உலகநாதன் தன் ஊருக்கே திரும்பி வரலானான். அவன் ஊர் எல்லைக்கு வந்த போது ''என்னைக் காப்பாற்றுங்கள்'' என யாரோ கூவுவது கேட்டு அவன் அந்தக் குரல் வந்த இடத்திற்கு ஓடினான். அங்கு ஒரு சன்னியாசி ஒரு பள்ளத்தில் விழுந்திருப்பதைக் கண்டு அவன் உடனே தன் கையை நீட்டி உதவ முயன்றான். ஆனால் அந்த சன்னியாசி சிரித்துக் கொண்டே அப்பள்ளத்திலிருந்து எழுந்து வந்து நின்றார். அவர் நின்றதும் அப்பள்ளம் மறைந்து சமதரையாக ஆகியது.

அதைக் கண்டு உலகநாதன் ஆச்சரியப்பட்டு ''இவ்வளவு சக்தி வாய்ந்த தாங்கள் ஏன் பள்ளத்தில் விழுந்து காப்பாற்றும்படி குரல் கொடுத்தீர்கள்?'' என்று கேட்டான். அவரும் ''நான் தினமும் உபாகரச் சிந்தனை கொண்ட ஒருவனுக்கு வரம் அளிப்பேன். அதிர்ஷ்டம் இருந்தால் அவனே என்னிடம் வந்து வரம் பெற்றுச் செல்வான். இன்று உனக்கு அதிர்ஷ்டம் இருக்கிறது. என்ன வரம் வேண்டும்? கேள்'' என்றார்.

உலகநாதனும் தான் பணம் சம்பாதித்துப் பெரிய மனிதனாகச் செய்த முயற்சிகளைக் கூறி அவற்றில் தோற்றதையும் கூறித் தன் வருத்தத்தை வெளிப்படுத்தினான். அந்த சன்னியாசியும் அவன் தலை மீது கையை வைத்து ''நீ மிகச் சிறந்த பண்டிதனாயும், இசைக் கலைஞனாயும், ஓவியனாகவும் இப்போதே ஆகிவிடுவாய். ஆனால் இவற்றால் நீ பணம் சம்பாதிக்க முடியாது. உன் உயர்ந்த குணத்தால் தான் பணத்தை அடைய முடியும்'' என்று கூறி ஆசீர்வதித்து விட்டுச் சென்றார்.



உலகநாதன் முதலில் கிருஷ்ண பட்டரைக் கண்டு ''ஐயா! எனக்கு இலக்கிய அறிவு வர வாய்ப்பே இல்லை என்று கூறினீர்கள். முயன்றால் எதுதான் முடியாது? இப்போது நானும் படித்துப் பண்டிதனாகி

TA-F-4



வந்திருக்கிறேன். நான் சில கேள்வி களைக் கேட்கிறேன். பதில் கூறுங்கள் பார்க்கலாம்'' என்றான். கிருஷ்ண பட்டரும் கேள்விகளைக் கேட்குமாறு கூறவே உலகநாதன் சில கேள்வி களைக் கேட்டான். கிருஷ்ணபட்டர் அவற்றிற்கு விடை சொல்ல முடியா மல் விழித்தார். அப்போது உலக நாதனே அவற்றிற்கான விடைகளைக் கூறினான். அது கேட்டு பட்டர் ஆச் சரியப்பட்டு ''அடேயப்பா! நீ என்னை விட அதிகம் கற்றிருக்கிறாயே'' என்று கூறிப் பாராட்டினார்.

உலகநாதன் கமலாபுரத்திற்குப் போய் கந்தசாமி பாகவதரைக் கண்டு அவரை ஒரு கீர்த்தனை பாடச் சொன் னான். அவர் பாடி முடித்ததும் அவன் ''நீங்கள் அதை அப்படிப் பாடக் கூடாது. இப்படிப் பாட வேண்டும்'' என்று அதே கீர்த்தனையைப் பாடிக் காட்டினான். அதைக் கேட்ட பாகவதர் பிரமித்துப் போனார். அவர் அவனைப் பாராட்டி ''அடேயப்பா! உம்மை மிஞ்ச யாராலும் முடியாது. உன் இசைக்கு நான் தலை வணங்கு கிறேன்'' என்றார்.

அங்கிருந்து உலகநாதன் சிங்கபுரம் போய் சிவசாமியைக் கண்டான். அவர் வரைந்து வைத்திருந்த ஓவியத்தில் அவரது அனுமதி பெற்று சில மாறு தல்களைச் செய்தான். அது மேலும் அழகு பெற்றது கண்டு சிவசாமி ''ஆஹா! என்னே உன் திறமை! உன்னைப் போன்ற ஒரு ஓவியனை உலகில் எங்குமே காண முடியாது'' என்று புகழ்ந்து கூறினார்.

இவ்வாறு மூவரிடமும் பாராட் டுப் பெற்ற உலகநாதனுக்குத் தன் திற மையில் நிறையப் பணம் சம்பாதிக்க முடியுமென்ற நம்பிக்கை ஏற்பட்டது. விஜயபுர மிராசுதாரர் வீரேந்திரர் பண் டிதர்களை கௌரவித்து பணமுடிப்பு அளிப்பவர் என அறிந்து அவன் அவரைக் கண்டு தன் புலமையை வெளிப்படுத்தினான். வீரேந்திரரும் உலகநாதனைப் பாராட்டி ''உங் களைப் போன்ற பண்டிதரிடம்தான் எங்கள் குடும்பத்தில் தலைமுறையாக இருந்து வரும் அரிய பனை ஓலை இருக்க வேண்டும். இது அரிய பொக் கிஷம். இது வேதவியாசர் கூறி விநாயகப் பெருமான் எழுதிய மகாபாரத ஏடுகளில் ஒன்று. இதை யாராலும் மதிப்பிட முடியாது'' எனக் கூறி ஒரு பனை ஓலையை மிகவும் பணிவுடன் அவனிடம் பரிசாகக் கொடுத்தார்.

உலகநாதனோ அவரிடமிருந்து பணத்தை பரிசாக எதிர்பார்த்தான். ஆனால் ஒரு பனை ஓலைதான் பரிசாகக் கிடைத்தது. அவன் தன் ஏமாற்றத்தை வெளிக்காட்டாமல் அதனை அவரிடமிருந்து வாங்கிக் கொண்டான். அப்போது அவர் ''பண்டிதரே! தாங்கள் இசைக் கலையிலும் வல்லுநர் என அறிந்தேன் அடுத்த ஊரில் எனது தமையனார் ஆனந்தரங்கம் இருக்கிறார். அவரைப் பாருங்கள். அவரும் தங்களுக்குப் பரிசளித்து கௌரவிப் பார்'' என்று கூறி விடை கொடுத்து அனுப்பினார்.

உலகநாதனும் விஜயபுரத்திற்கு அடுத்துள்ள ஊருக்குப் போய் ஆனந்தரங்கத்தைக் கண்டான். அவரும் அவனை வரவேற்று அவனது இனிய கானத்தைக் கேட்டு ரசித்து மெய் மறந்தார். பிறகு அவர் ஒரு சிறு பேழையைக் கொண்டு வந்து உலகநாதனிடம் கொடுத்து ''இது விலை மதிக்க முடியாத பொருள். இதன் மூடியைத் திறந்தால் இதிலிருந்து இராம பக்தரும் கர்நாடக இசை மும்மூர்த்திகளில் ஒருவருமான ஸ்ரீ தியாகப் பிரம்மமே தம் சொந்தக் குரலில் கீர்த்தனைகள் பாடுவதைக் கேட்கலாம். இத்தகைய அரிய பொருள் யாரிடமும் இல்லை. இது எம் குடும்ப சொத்து. இந்த அபூர்வப் பொருளை உங்களுக்குப் பரிசாக அளிக்கிறேன். ஏற்றுக் கொள்ளுங்கள்'' எனக் கூறி அப் பேழையை பய பக்தியுடன் கொடுத்தார்.

இங்கும் பணம் கிடைக்காததால் உலகநாதன் ஏமாற்றமே அடைந்தான் ஆனால் அதை வெளிக்காட்டாமல்



அவன் ஆனந்தரங்கம் கொடுத்த அச் சிறு பேழையை வாங்கிக் கொண்டான். அப்போது அவர் ''மகா வித்வானே! நீங்கள் திறமை மிக்க ஓவியர் என்பதை நான் அறிவேன். என் தமையனார் தரணீதரர் அடுத்த ஊரில்தான் இருக்கிறார் அவரும் சிறந்த ஓவியரே. உங்களைக் கண்டால் மகிழ்ந்து வரவேற்று கௌரவித்துப் பரிசும் அளிப்பார். அவரைக் கண்டிப்பாகப் பார்த்து விட்டுப் போங்கள்'' என்று கூறி அனுப்பினார்.

உலகநாதனும் தரணீதரரிடமிருந்தாவது பணம் பரிசாகக் கிடைக்கும் என்ற ஆசையோடு சென்றான். தன்னைக் காண வந்திருப்பவர் ஓவியர் என அறிந்த அவர் அவனை வரவேற்றார். ஓவியக் கலையின் பல நுணுக்கங்களை அவன் சொல்லக்



கேட்ட தரணீதரர் அவனை வெகுவாகப் புகழ்ந்து அஜந்தா ஓவியங்களில் தனியாகக் கிடைத்த ஒரு ஓவியத்தை அவனுக்குப் பரிசாக அளித்தார். அது மிக அழகானது. உயர்கலையின் எடுத்துக் காட்டாக இருந்தது.

உலகநாதன் அதனையும் தன் ஏமாற்றத்தை வெளிக் காட்டாமல் வாங்கிக் கொண்டான். அப்போது தரணீதரர் ''சகல கலா வல்லவரே! தாங்கள் இந் நாட்டு மன்னரைக் கண்டால் அவர் தக்க மரியாதை செய்து பல பரிசுகளையும் மானியங்களையும் அளிப்பார்'' எனக் கூறி அவனை அனுப்பினார்.

மூவரிடமும் பணம் கிடைக்காததால் மன்னனிடமாவது பணத்தைப் பெற உலகநாதன் சென்றான். அங்கு ஒரு சத்திரத்தில் தங்கச் சென்ற போது அங்கு கிருஷ்ணபட்டரையும், கந்தசாமி பாகவதரையும் ஓவியர் சிவசாமியையும் கண்டான். அவர்களிடம் பேசியதில் அவர்கள் மூவரும் மறுநாள் நடக்கப் போகும் இலக்கியம், இசை, ஓவியம் ஆகிய போட்டிகளில் கலந்து கொண்டு பரிசுகளைப் பெற்று செல்லலாமென்ற ஆசையுடன் வந்திருந்தார்கள்.

அவர்கள் உலகநாதனைக் கண்டதும் அவனும் போட்டியில் கலந்து கொள்ள வந்திருக்கிறான் என்றும் அப்போது தமக்குப் பரிசுகள் கிடைக்காதென்றும் எண்ணி மனம் உடைந்து போனார்கள். அப்போது உலகநாதன் அவர்களிடம் ''நீங்கள் மூவரும் என் குருவானவர்கள். உங்களால் தான் நான் இந்த உயர் நிலையில் இருக்கிறேன். நான் போட்டியைக் காண்பேனேயொழிய அதில் கலந்து கொள்ளப் போவதில்லை. இதனால் நீங்கள் மூவரும் வெற்றி பெற்றுவிடலாம். ஒரு வேளை போட்டியில் நீங்கள் வெற்றி பெறாவிட்டால் உங்களைத் தோற்கடித்தவர்களுடன் போட்டி போட்டு நான் வெற்றி பெறுவேன்'' என்றான்.

இதைக் கேட்டு அம் மூவரும் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார்கள். அவர்கள் போட்டியில் கலந்து கொண்டார்கள். மூவருமே தமது துறைகளில் முதலாவதாக கலந்து ஆளுக்கு லட்சம் வராகன்கள் வீதம் பரிசுகளையும் பெற்றார்கள். அவர்கள் பரிசுப் பணத்தோடு வந்து உலகநாதனிடம் ''எங்களுக்குப் பரிசாகப் பணம் கிடைத்தது. நாங்கள் கொஞ்சம் பணத்தைஉனக்குக் கொடுக்கிறோம்'' என்றார்கள்.

உலகநாதனும் ''நான் தானமாக எதையும் பெறமாட்டேன்'' என்று கூறி அவர்கள் கொடுக்க வந்த பணத்தை ஏற்க மறுத்தான். அவர்களும் ''பணத்தை சும்மா வாங்கிக் கொள்ள வேண்டாம். எங்களுக்கு ஏதாவது அறிவுரை கூறு. அதற்கு காணிக்கை செலுத்துவது போலப் பணத்தைக் கொடுக்கிறோம்'' என்றார்கள். அவர்களது நோக்கம் தம் துறைகளில் இன்னும் ஏதாவது புதிய விஷயம் இருந்தால் அதை உலகநாதனிடமிருந்து தெரிந்து கொள்ள வேண்டும் என்பதே.

ஆனால் உலகநாதனோ அவர்கள் தனக்கு ஏதோ ஒன்றைக் கூறிப் பணம் கொடுக்கவே விரும்புகிறார்கள் என எண்ணி விட்டான். அதனால் அவன் ''நான் என்ன சொல்லிக் கொடுத்து விடப் போகிறேன். உங்களுக்கு ஏதாவது கொடுக்கலாம் என்றால் என்னிடம் மூன்று பொருள்கள் உள்ளன. ஒன்று வேதவியாசர் சொல்லி விநாயகப் பெருமான் எழுதிய மகாபாரதப் பனைஓலைகளில் ஒன்று. இரண்டாவதாக தியாகப் பிரம்மம் தம் குரலிலேயே பாடுவதைக் கேட்க வைக்கும் ஒரு சிறு பேழை. மூன்றாவதாக அற்புதமான அஜந்தா ஓவியம். இவற்றை வேண்டுமானால் உங்களுக்குக் கொடுக்கிறேன். இவற்றிற்கு யாராலும் விலை மதிப்பிட்டுக் கூற முடியாது'' என்றான்.

அதுகேட்டு மூவரும் ஆவல் கொண்டவர்களாய் அவை பற்றிய விவரங்களை உலகநாதன் கூறக் கேட்டுத் தெரிந்து கொண்டார்கள். அப்போது அவர்கள் ''இவை எங்குமே



கிடைக்காத பொருள்கள். எங்களுக்குக் கிடைத்த பரிசுப் பணத்தை அப்படியே முழுவதுமாகக் கொடுத்து விடு'' என்றார்கள். உலகநாதனும் ''சரி. அந்த மரத்தடியே போய் உட்கார்ந்து சற்று யோசித்துப் பிறகு முடிவு செய்யலாம்'' என்றான். அவர்களும் அதற்கு இணங்கவே நால்வரும் அந்த மரத்தின் கீழ் போய் உட்கார்ந்தார்கள்.

உலகநாதன் சற்று யோசித்து விட்டு ''ஆம். அந்த சன்னியாசி கூறியது சரியே. நீங்கள் உண்மையில் உங்கள் துறைகளில் திறமை பெற்றவர்கள். உங்களைப் போன்றவர்களிடமே இப்பொருள்கள் இருக்க வேண்டும். பண்டிதருக்குப் பனை ஓலையையும் பாகவதருக்கு இசைப் பேழையையும் ஓவியருக்கு அஜந்தா ஓவியத்தையும் கொடுக்கிறேன். நீங்கள் மூவரும்

சேர்ந்து கொடுக்கும் மூன்று லட்சம் வராகன்களை ஏற்றுக் கொள்கிறேன்'' என்றான். மூவரும் தம் பணத்தை உலகநாதனுக்குக் கொடுத்து அவன் கொடுத்த மூன்று அபூர்வப் பொருள் களையும் வாங்கிக் கொண்டு சென்றார் கள்.

வேதாளம் இக் கதையைக் கூறி ''உலகநாதன் நிறையப் பணம் சம் பாதித்துப் பெரிய மனிதன் ஆக வேண்டுமென்று தானே ஆசைப்பட் டான்? அவன் சன்னியாசியிடமி ருந்து அபூர்வ சக்திகளையும் பெற் றானே. அவற்றைக் கொண்டு போட்டி களில் கலந்து கொண்டு பணம் சம் பாதிக்கலாமே. அப்படிச் செய்யாமல் தன்னிடமிருந்த அபூர்வப் பொருள் களை அந்த மூவரிடம் கொடுத்து விட்டு அவர்கள் மன்னனிடமிருந்து பெற்ற பணத்தை வாங்கிக் கொண் டானே. இது புத்திசாலித்தனமான செயலா? இக் கேள்விக்குச் சரியான விடை தெரிந்திருந்தும் நீ பதில் கூறா விட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகிவிடும்'' என்றது.

விக்கிரமனும் ''சன்னியாசி உலக நாதனுக்கு சக்திகளை அளித்த போது பணம் சம்பாதிப்பதில் மட்டும் நிபந் தனை விதித்தார். அவன் அச் சக்தி களால் பணம் சம்பாதிக்கக் கூடா தென்றும் தன் உயரிய குணத்தாலே பணத்தை அடைய வேண்டும் என்ப துவே அது. உலகநாதன்தான் தன் முயற்சியால் மூன்று துறைகளில் திறமை பெறவில்லை என்றும் சன்னி யாசியின் வரத்தால் அவற்றைப் பெற்றதையும் உணர்ந்தான். எனவே போட்டியில் கலந்து கொண்டு பணத்தை அடையாமல் உண்மை யான கலைஞர்களை வெற்றி பெற வைத்து அவர்களுக்குத் தன்னிடம் இருந்த அபூர்வப் பொருள்களைக் கொடுத்து பதிலுக்கு மூன்று லட்சம் வராகன்களைப் பெற்றான். இது சன்னியாசியின் நிபந்தனையை மீறா ததும், அவனாகப் பணம் சம்பாதித்த வழியுமாகும். இது அறிவுபூர்வமான செயல்'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலை யவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.






# ஆந்திரக் கடற்கரையில்

கருத்து: **மீரா நாயர்** ◆ ஓவியர்: **கோபகுமார்**

மசூலிப் பட்டணத்திற்கு வட கிழக்கே நீளமான கோதாவரி நதியின் டெல்டா பகுதி உள்ளது. இந்த டெல்டாவின் வட கிழக்கு முனையில் யானாம் நகர் உள்ளது. இங்கு ஃப்ரெஞ்ச் பேசப்படுகிறது.

யானாம் 34 சதுர கிலோ மீட்டர் பரப்பளவு கொண்ட சிறிய நகரம். நீண்ட காலமாக இது ஃப்ரெஞ்சுக்காரர் வசம் இருந்தது. தற்போது இது யூனியன் பிரதேசமான பாண்டிச்சேரிக்குள் சேர்க்கப்பட்டுள்ளது. இதற்கு வடக்கே சர்ப்பபுரம் என்ற கடற்கரை கிராமம் உள்ளது. இங்கு பாம்புகள் அதிகம். இங்குள்ள பவ நாராயண சுவாமி ஆலயம் புகழ் பெற்றது.

பாம்புகளின் மன்னனான அனந்தனின் தாயார் ஒரு முறை பாம்புகளின் மீது கோபம் கொண்டு சாபம் கொடுத்துவிட்டாள். அதனால் பாம்புகளெல்லாம் ஒரு யாகத்தீயில் விழுந்து எரிந்து போயின. அப்போது அனந்தன் தீர்த்த யாத்திரை சென்றிருந்தான். அவன் திரும்பி வந்ததும் நடந்ததைக் கேள்விப்பட்டு மிகவும் வருந்தினான். அவன் இறந்த பாம்புகள் உயிர் பெற வேண்டுமென வேண்டி விஷ்ணு பகவானைக் குறித்துக் கடுந்தவம் புரிந்தான். விஷ்ணுவும் அவன் முன் தோன்றி அவன் கோரிய வரைத்தை அளித்தார். அனந்தனும் தான் கண்ட விஷ்ணுவைப் போல ஒரு விக்கிரகம் செய்து ஒரு கோவிலைக் கட்டி அதில் அந்த விக்கிரத்தைப் பிரதிஷ்டை செய்தான். அந்த ஆலயம் தான் பவநாராயண சுவாமி ஆலயம் என்று புகழ் பெற்றது.

**காகிநாடாவின் மீன் பிடிப்போர் துறைமுகம்**



இன்னும் சில கிலோ மீட்டர் வடக்கே சென்று காகி நாடாவை அடைகிறோம். இச் சிறு துறைமுகம் பருத்தி, வேர்க்கடலை, சர்க்கரை, புகையிலை ஆகியவற்றை ஏற்றுமதி செய்கிறது. 1923ல் கிலாபத் இயக்கத் தலைவரான மௌலானா முகம்மது அலியின் தலைமையில் காங்கிரஸ் கட்சியின் முக்கிய மாநாடு நடை பெற்றது.

காகிநாடாவிலிருந்து 17 கி.மீ தொலைவில் திராட்சாராமம் என்ற ஊர் உள்ளது. இங்கு தக்ஷப் பிராஜபதி தன் யாகத்தைச் செய்தான் எனக் கருதப்படுகிறது. தக்ஷன் தன் மகள் தாட்சாயினியை சிவபிரானுக்கு மணம் செய்து வைத்தான். ஆனால் சிவன் மீது வெறுப்பு கொண்ட தக்ஷன் தான் செய்த யாகத்திற்கு வேண்டுமென்றே சிவபிரானை அழைக்க வில்லை. தாட்சாயினி தன் தந்தையின் யாகத்திற்குச் செல்லப் பிடிவாதம் பிடித்து அவள் மட்டும் சென்றாள். தக்ஷன் அவளை லட்சியம் செய்யாமல் அவளையும் அவள் கணவரையும் கண்டபடி ஏசினான். இதைப் பொறுக்க முடியாமல் தாட்சாயினி அந்த யாகத் தீயில் குதித்து உயிர் நீத்தாள். இதைக் கண்ட சிவபிரான் கோபம் கொண்டு வீரபத்திரனைச் சிருஷ்டிக்க, அவன் தக்ஷனைக் கொன்றான்.



திராட்சாராமம் ஆலயம்

இங்குள்ள கோவில்தான் 14வது நூற்றாண்டில் வாழ்ந்த தெலுங்கு கவிஞர் ஸ்ரீநாதரை பீம காண்டம் என்ற மாபெரும் காவியத்தை எழுதத் தூண்டியதாம். தெலுங்கில் இலக்கியப் படைப்பு இவர் காலத்திலிருந்து தான் ஆரம்பித்ததாகக் கருதப்படுகிறது.

இந்தக் கோவில் வளாகத்தில் முஸ்லிம் பெரியோரான சையத் ஷா ஔலியாவின் சமாதி இருப்பது ஒரு அதிசயக் காட்சி.



ராஜமண்ட்ரியின் ரோடு—ரயில் பாலம்

ராஜ மண்ட்ரி எனப்படும் ராஜமகேந்திரவரம் காகிநாடவிற்கு மேற்கே கோதாவரி நதிக்கரையில் அமைந்துள்ள நகரம். இது ஜமக்காள விரிப்புகளுக்கும் சந்தன மரச் சாமான்களுக்கும் பெயர் பெற்றது. இங்கு 56 வளைவுகள் கொண்ட நீண்ட பாலம் கட்டப் பட்டுள்ளது. தெலுங்கில் ஆந்திர மகா பாரதத்தை எழுதிய கவிஞர் நன்னய்யாவுக்கும் இவ்வூருக்கும் தொடர்பு உண்டாம்.

இங்கிருந்து நாம் விசாகப் பட்டினத்தை அடைகிறோம். மேற்கே ராட்டர் டாமிற்கும் கிழக்கே டோக்கியோவுக்குமிடையே உள்ள மிக ஆழமான துறைமுகம் இதுதான். வைசாகா என்ற வீரக் கடவுளின் பெயர் கொண்ட இப்பட்டினத்தில் முன்பு கடற்கரையில் அக் கடவுளின் ஆலயம் இருந்ததாம். மீனவர்களின் சிறு கிராமமாக இருந்த இதனை ஆங்கிலேயர்கள் தாம் பெரிய நகரமாக ஆக்கினார்கள். இன்று விசாகப்பட்டினம் பெரிய தொழில் நகரமாகி விட்டது. 1952ல் இங்கு ஹிந்துஸ்தான் ஷிப் யார்ட் என்னும் பெரிய கப்பல் கட்டும் துறை அமைக்கப்பட்டது.



**விசாகப்பட்டின கப்பல் கட்டும் துறை**

இந்த நகரின் பெயர் டோல்பின் மூக்கு என்ற பாறையால் நினைவில் இருக்கிறது. இப்பாறை சமுத்திரத்துள் நீண்டு உள்ளது. இந்தப் பெரும் பாறை மீது ஒரு கலங்கரை விளக்கம் கட்டப்பட்டுள்ளது. இதன் ஒளி 65 கி.மீ. வரை செல்கிறது.

வால்டேரும் விசாகப்பட்டினமும் இரட்டை நகரங்கள். இதன் மிதமான தட்ப நிலை இதை ஒரு ஆரோக்கிய வாசஸ்தலமாக ஆக்கியுள்ளது. விசாகப் பட்டினத்தின் மூன்று புகழ் பெற்ற கடற்கரைகள் ராமகிருஷ்ண மிஷன் கடற்கரை, ரிஷி கொண்டா கடற்கரை மற்றும் லாசன்ஸ் வளைகுடா. சிம்மாசலம் விசாகப்பட்டினத்திலிருந்து 16 கி.மீ தொலைவிலுள்ள மலைக் கோவில். இங்குள்ள நரசிம்ம சுவாமி கோவில் 11ம் நூற்றாண்டில் கட்டப்பட்டதாம்.




புராணங்களின்படி அரக்கர்களின் மன்னன் இரணியகசிபு தன் மகன் பிரகலாதன் விஷ்ணு பக்தனாக இருப்பதை வெறுத்தான். அவன் தன் மகனைத் தன் வழிக்குக் கொண்டு வர முயன்று தோல்வியுற்று சிம்மாசல மலையைத் தன் மகனின் தலை மீது ஏற்றினானாம். இது கண்டு தன் பக்தனுக்குத் துன்பம் தரும் இரணிய கசிபுவின் மீது கோபம் கொண்ட மகாவிஷ்ணு சிங்கமும் மனிதனாயுமுள்ள நரசிம்ம உருவில் வந்து அம் மலையருகே வந்து அதைத் தூக்கி பிரகலாதனைக் காப்பாற்றினாராம். பின்னர் கடும் கோபம் கொண்டு இரணியகசிபுவைப் பிடித்து கொன்றாராம். அவரது கோபம் தணிய இன்றும் அவரது விக்கிரகத்திற்கு சந்தனக் காப்பு போடப் பட்டு ஆண்டுக்கு ஒரு முறை ஏப்ரல்-மே மாதங்களில் அது எடுக்கப்பட்டு மீண்டும் சந்தனக் காப்பு சாத்தப்படுகிறது. இது சந்தன யாத்திரை என்ற விழாவாக இங்கு நடத்தப்படுகிறது. அது சமயம் நரசிம்ம பகவானை தரிசிக்க பக்தர்களின் கூட்டம் பெரிய அளவில் கூடுகிறது.






# இவளா ராஜகுமாரி!

மகுடபதி தன் இளம் வயதிலேயே தாய் தந்தையரை இழந்து விட்டான். அவனது தாத்தா மிகவும் சிரமப்பட்டு அவனை வளர்த்து பதினெட்டு வாலிபனாக ஆக்கிவிட்டார். மகுடபதி வீட்டின் நிலைமையை அறியாமல் கோவில் காளை போலத் திரிந்து வந்தான். திடீரென தாத்தா நோய் வாய்ப்பட்டு படுத்து விடவே வைத்தியம் செய்ய வீட்டில் பணம் இல்லாது போயிற்று. அப்போது தான் மகுடபதிக்கு வீட்டின் நிலை புரிந்தது.

தாத்தாவிற்கு வைத்தியம் செய்ய அவன் தானிருந்த சொந்த வீட்டை விற்றான். அவருக்கு வைத்தியமும் செய்து பார்த்தான். ஆனால் அவரது உடம்பு தேறவில்லை. முடிவில் அவர் இறந்தே போனார். மகுடபதி அவருக்கான ஈமச் சடங்குகளைச் செய்து விட்டு தன்னிடம் எவ்வளவு பணம் மீதம் உள்ளது என்று எண்ணிப் பார்த்தான். சரியாக இருபது வெள்ளிக் காசுகளே இருந்தன.

அதை வைத்துக் கொண்டு எப்படிப் பிழைப்பது என்று அவன் ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டு யோசித்துக் கொண்டிருந்தான். அப்போது அவ்வழியே வந்த மலைக் குறவன் ஒருவன் அவன் முகத்தைப் பார்த்து விட்டு ''ஐயா முகத்தில் ராஜகளை தாண்டவம் ஆடுகிறது. நீங்கள் இப்போது ஏழையாக இருந்தாலும் உங்களுக்குப் பிற்காலத்தில் ராஜயோகம் இருக்கிறது'' என்று ஆரூடம் கூறி அவனிடமிருந்து ஒரு வெள்ளிக் காசை வாங்கிக் கொண்டு போய்விட்டான்.

அன்றிரவு தூங்கப் போகும் போது மகுடபதி குறவன் சொன்ன ஆரூடத்தை நினைத்துக் கொண்டே தூங்கினான். அவன் தன் தலை மீது நவரத்தினங்கள் பதித்த கிரீடம் இருப்பது போலக் கனவு கண்டான். அப்போது விடியற்காலை வேளை. அவன்

—எஸ். சோபினி—



கோழி கூவுவது கேட்டு கண் விழித்து விடிந்து போனதைக் கண்டான். தான் விடியற்காலையில் மகுடம் அணிந்து போலக் கனா கண்டதால் அது நிச்சய மாகப் பலிக்கும் என்ற நம்பிக்கை அவனுக்கு ஏற்பட்டு விட்டது.

குறவன் ஆரூடப்படி ராஜயோகம் கிடைக்க வேண்டுமென்றால் அவ் வூரைவிட்டுத்தலை நகருக்குப் போக வேண்டும் என்று எண்ணி மகுடபதி தலைநகரை நோக்கிச் சென்றான். மூன்று நாட்களுக்குப் பின் அவன் தலைநகருக்குப் போய் ஒரு உணவு விடுதியை நடத்தும் கிழவியின் வீட்டை அடைந்தான். அவன் கை கால்களை அலம்பிக் கொண்டு அங்கு சாப்பிட வந்தவர்களோடு சேர்ந்து சாப்பிட உட்கார்ந்தான்.

கிழவி உணவு பரிமாறியவாறே ஒருவரிடம் ''என்னமோ அப்பா! நீ அரசாங்க அதிகாரி. நெடு நாளாக நோய் வாய்ப்பட்டிருந்த நம் அரசர் உடல் தேறிவிட்டார் என்பதால் சந்தோஷப்படுகிறாய். ஆனால் எனக்கோ ராஜகுமாரியை நினைத் தாலே ஒரே கவலையாக இருக் கிறது. அவள் தினமும் ஒரே விதக் கனவைக் காண்கிறாளாம். அவள் மலைக் கோவிலுக்குப் போய்க் கொண்டிருக்கையில் ஒரு நல்ல பாம்பு தன் மீது விழுவது போலவும் அப் போது எங்கிருந்தோ ஒரு வாலிபன் வந்து அந்த பாம்பை பிடித்து தூக்கி எறிவது போலவும் தான் தினமும் அவள் காணும் கனவு. அவள் மணந்தால் அந்த வாலிபனைத்தான் மணக்கப் போவதாயும் அப்படி மணக்க முடியாவிட்டால் வாழ் நாள் முழுவதும் கன்னியாகவே இருக்கப் போவதாயும் கூறுகிறாள். இதுவரை அவள் மாலை வேளையில் கோவி லுக்கு தினமும் போனபோது ஒரு பாம்பு கூட அவள் கண்ணில் படவும் இல்லையாம்'' என்றாள்.

இதையெல்லாம்சாப்பிட்டவாறே மகுடபதி கேட்டுக்கொண்டிருந்தான். மலைக் குறவன் கூறியபடி தனக்கு ராஜயோகம் விரைவிலேயே வரப் போகிறது என்று எண்ணி மகிழ்ந்து போனான். அவன் சாப்பிட்டு எழுந் ததும் எங்காவது பாம்பாட்டி இருக் கிறானா என்று தேடிக் கொண்டு போனான். ஓரிடத்தில் ஒரு பாம்பாட் டியைக் கண்டு அவனிடம் போய் ''பல் பிடுங்கப்பட்ட நல்ல பாம்பு விலைக்கு இருக்கிறதா?'' என்று கேட்டான்.

அவனும் ''ஓ! இருக்கிறது அதன் விலை இரண்டு வெள்ளிக் காசுகள்'' எனவே மகுடபதி இரண்டு வெள்ளிக் காசுகளைக் கொடுத்து ஒரு பாம்பை வாங்கிக் கொண்டு மலைக் கோவிலுக்குப் போகும் வழியில் சென்றான். அங்கு ஓரிடத்தில் பாம்பைக் கையில் வைத்துக் கொண்டு மறைந்து இருந்து வருவோர் போவோரைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

மாலைப் பொழுதாயிற்று. கோவிலுக்கு இரு பெண்கள் சென்று கொண்டிருந்தார்கள். மகுடபதி அவர்களை உற்றுப் பார்த்தான். அவர்கள் சாதாரண உடைகளை அணிந்திருந்ததால் அவர்களில் யாரும் ராஜகுமாரி இல்லை என்று நினைத்து அவன் மிகவும் பொறுமையுடன் காத்துக் கொண்டிருந்தான்.



இருட்டலாயிற்று. அப்போது விலையுயர்ந்த ஆடைகளை அணிந்த பெண் ஒருத்தி மலைக் கோவிலுக்குச் சென்று கொண்டிருந்தாள். அவளே ராஜகுமாரி என்று எண்ணி மகுடபதி பாம்பை அவள் மீது வீசினான். பாம்பு அவளது தோளின் மீது விழுந்தது. அவள் 'ஐயோ பாம்பு' என்று அலறினாள். மறு வினாடியே மகுடபதி ஓடி வந்து அந்தப் பெண்ணின் தோளின் மீதிருந்த பாம்பைப் பிடித்துத் தூர எறிந்தான்.

அந்தப் பெண் சற்று நேரம் திகைத்துப் போய் நின்றாள். பிறகு அவள் மகுடபதியை நன்கு பார்த்து ''ஆமாம். என் கனவு பலித்துவிட்டது. நான் உங்களைத்தான் மணப்போன்'' என்றாள். மகுடபதியும் ''மணமா? என்னையா? உன்னைப் பார்த்தால் ராஜகுமாரி போலிருக்கிறதே'' எனவே அவளும் ''ஆம். நான் ராஜகுமாரிதான் நான் தினமும் கனவில் கோவிலுக்குப் போகும் போது ஒரு பாம்பு என் மீது வந்து விழுவது போலவும் எங்கிருந்தோ ஒரு வாலிபன் ஓடி வந்து அந்தப் பாம்பைத் தூக்கி எறிந்து என்னைக் காப்பாற்றியது போலவும் கண்டு வந்தேன். மணந்தால் அந்த வாலிபனையே மணப்பது என நான் தீர்மானித்தும் கொண்டேன். இன்று அக்கனவு பலித்தது. பாம்பைத் தூக்கி எறிந்து என்னைக் காப்பாற்றினீர்கள். நாம் இப்போதே கோவிலுக்குப் போய் மாலை மாற்றி மணம் புரிந்து கொண்டு நம் இருப்பிடத்திற்குப் போகலாம்'' என்றாள்.

மகுடபதியும் தனக்கு ராஜயோகம்

வந்து விட்டது என்று எண்ணி மகிழ்ந்து அவளுடன் கோவிலுக்குச் சென்றான். அங்கு இருவரும் மாலை மாற்றிக் கொண்டு தம்பதிகளாயினர். அவள் மகுடபதியை அழைத்துக் கொண்டு கிளம்பவே அவனும் தான் அரண்மனைக்குப் போகப் போவதாக எண்ணி மகிழ்ந்து கொண்டிருந்தான். ஆனால் அந்தப் பெண் அவனை உணவு விடுதி நடத்தும் கிழவி இருக்கும் இடத்திற்கு அழைத்துக் கொண்டு போய் நின்றதும் அவன் தலையே சுழன்றது.

அவன் அவளிடம் ''இங்கே ஏன் அழைத்து வந்தாய்? இந்தக்கிழவியை உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டான். அவளும் சிரித்தவாறே ''தெரியுமா என்றா கேட்கிறீர்கள்? சித்திரைத் திருவிழாவில் அநாதைக் குழந்தையாக இருந்த என்னைக் கண்டு எடுத்து வந்து வளர்த்துப் பெரியவளாக்கியவள் இந்தக் கிழவிதான்'' என்றாள். அப்போது மகுட பதி ''நீ ராஜகுமாரி இல்லையா?'' என்று தடுமாறியவாறே கேட்க அவளும் ''நான் ராஜகுமாரிதான். எனக்கு அந்தப் பெயரை வைத்தவளும் இந்தக் கிழவிதான். இதில் சந்தேகப்பட என்ன இருக்கிறது'' என்றாள்.

மகுடபதியும் ''நீ உண்மையிலே ராஜகுமாரி இல்லையா? அப்படியானால் அரசகுமாரி அணியும் இந்த ஆடைள் உனக்கு எப்படிக் கிடைத்தன?'' என்று கேட்கவே அவளும் ''நான் அரசகுமாரியின் பணிப்பென். இவை அவள் எனக்கு பரிசாகக் கொடுத்த அவளது ஆடைகள்'' என்றாள். கிழவியும் மணக் கோலத்தில் வந்து நின்ற மகுட பதியையும் தான் வளர்த்த பெண் ரரஜகுமாரியையும் பார்த்தாள். பிறகு அவள் ''ராஜகுமாரி! என் ராஜாத்தி! இனி என் பொறுப்பும் பாரமும் குறைந்தது இந்த உணவு விடுதியை இனி மாப்பிள்ளையே நடத்தி வரட் டும். எனக்கும் வயதாகி விட்டது. ஓய்வு எடுத்துக் கொள்கிறேன்'' என்றாள்.

அந்தப் பெண்ணும் ''பாட்டீ! என் கல்யாணத்தைப் பற்றிக் கவலைப் பட்டாயே. அதுவாக நடந்து விட்டது பார்!'' என்றாள். கிழவியும் ஆனந்தக் கண்ணீர் வடித்தாள் மகுடபதியும் தான் வாழ ஒரு வழி கிடைத்ததே என எண்ணி மனம் தேறினான்.







***1. நீர்வாழ் சிறு பிராணிகளால் உருவான வெள்ளைப் பாறைகள்***

நீர்வாழ் சிறு பிராணிகளின் எலும்புகள் சேர்ந்து இந்த வெண்பாறைகள் உருவாகியுள்ளன. லட்சக்கணக்கான ஆண்டுகளாக இந்த எலும்புகள், ஒன்றன் மீது ஒன்று விழுந்து இறுகி இப்படிப் பாறைகளாக ஆகி நில நடுக்கத்தால் கடலுக்கு மேல் வந்தன.



# உலகில் இவற்றை எங்கு காண்பீர்கள்?

***2. ஸ்தூபி போன்ற தானிய களஞ்சியம்***



இந்த தானியக் களஞ்சியம் இந்தியாவில் உள்ளது. இதன் கதவு உட்புறமாகத்தான் திறக்கும். களஞ்சியம் நிறைந்திருந்தால் கதவைத் திறக்க முடியாது. 17வது நூற்றாண்டில் கிழக்கிந்தியக் கம்பெனி ஒரு பஞ்சம் வந்த போது இதைக் கட்டியது.

***3. உலகில் மிக உயரமான சிலை***

கம்பீரமாய் ஒரு பெண்மணி தன் கையில் வாளை வைத்துக் கொண்டிருக்கும் இச் சிலையின் உயரம் 82 மீட்டர்.



***4. எரிமலை வெடிப்பில் உருவான கூர் மலைகளில் வாழும் மனிதர்கள்***

பத்து லட்சம் ஆண்டுகளுக்கு முன் எரிமலை வெடிப்பில் உருவான இந்தக் கூர் மலைகள் ஒரு நகரம் போலாகி மக்கள் வாழ வசதியாக உள்ளது.

***5. மிகப் பெரிய தேசியப் பூங்கா***

இந்தப் பூங்காவில் 400 வகைப் பறவைகளும் 150 வகை ஊர்வனகளும், 50 வகை மீன்களும் 40 விதத் தவளைகளும், 34 வகைப் பாம்புகளும் உள்ளன. 7000 யானைகளும், 1500 சிங்கங்களும், 900 புலிகளும் 250 சிறுத்தைகளும் 19,4555 சதுர கி.மீட்டர் பரப்பளவில் இப் பூங்காவில் திரிகின்றன.



# படப் புதிர்



1. இது ஒரு அழகிய பெண்ணின் படம். இதில் இன்னொரு முகம் மறைந்துள்ளது. உங்களால் கண்டுபிடிக்க முடியுமா?



2. இந்த சைகிள்காரர் வெகுவேகமாகத் தம் சைகிளில் போய் கொண்டிருக்கிறார். ஆனால் ஓவியர் இப்படத்தை வரைந்ததில் ஒரு தவறு செய்து விட்டார். அது என்ன என்று நீங்கள் கூறுவீர்களா?

# கதைப் புதிர்

***இந்தக் கதையில் ஒரு தவறு உள்ளது. அதைக் கண்டு பிடியுங்கள்.***

## மன்னரின் தாராள குணம்

சந்திரகுப்த மௌரியரின் பேரர் அசோக மன்னர். ஒருமுறை ஒரு பூங்காவில் நடந்து கொண்டிருந்த போது அவரை ஒரு கல் தாக்கியது. அவரது மெய்க் காவலர்கள் கல் எறிந்த ஸ்திரீயைப் பிடித்து விட்டனர். அவளும் தடுமாறியவாறே ''நான் என் குழந்தைகளுக்கு அந்த மரத்தின் கொய்யாப் பழங்களை அடித்து எடுத்துப் போய்க் கொடுக்க நினைத்தேன். அவர்கள் காலையிலிருந்து எதுவும் சாப்பிடவில்லை. நான் எறிந்த கல் பழத்தின் மீது படாமல் உங்கள் மீது பட்டு விட்டது'' என்று கூறினாள்.



அப்போது அசோகர் தம் அமைச்சரிடம் ''இவளுக்கு நூறு வெள்ளிக் காசுகள் கொடுங்கள்'' என்றார். அமைச்சரோ ''உங்களைக்கல்லால் அடித்த அவளுக்கு தண்டனையல்லவா கொடுக்க வேண்டும்?'' என்றார்.

அப்போது அசோகர் ''அவள் மரத்தை அடித்திருந்தால் அவளுக்குப் பழங்கள் கிடைத்திருக்குமே. நான் அந்த மரத்தை விட தாராள மனம் கொண்டவனாக இருக்க வேண்டாமா'' என்றார்.

**விடை.**

அசோக மன்னர் காலத்தில் இந்தியாவில் கொய்யா மரம் இருக்கவில்லை. ஐரோப்பியர்தான் கொய்யாவை இந்தியாவிற்குக் கொண்டு வந்தனர்.



# மூளைக்கு வேலை

1. இவர்களை ஒரு வரிசைக்கு நால்வர் வீதம் நான்கு வரிசைகளில் நிறுத்துங்கள்





2. உங்கள் இடது காலையும் இடது தோளையும் சுவரின் மீது அழுத்தி நின்று உங்கள் வலது காலை உயரத் தூக்கச் சொன்னால் உங்களால் அதைச் செய்ய முடியுமா?

3. இந்தக் கற்பனைப் பிறவிகளின் பெயர்கள் இடம் மாறியுள்ளன. அவற்றைச் சரியான இடங்களில் எழுதுங்கள்.









4. இங்கு ஐந்து தொப்பிகள் உள்ளன. அவற்றில் இரண்டு சிவப்பு. மூன்று கருப்பு. மூன்று நண்பர்களான மோகனும், ராமும், வினயும் இவற்றில் மூன்று தொப்பிகளை அணிந்திருக்கிறார்கள். மற்ற இரு தொப்பிகள் தென்படவில்லை.



ராமனால் தான் இருக்குமிடத்திலிருந்து மோகனையும் வினயையும் பார்க்க முடிகிறது. வினயால் மோகனை மட்டும் பார்க்க முடிகிறது. மோகனால் யாரையும் பார்க்க முடியவில்லை. ஆனால் மூவரும் ஒருவர் சொல்வதை மற்றவர் கேட்க முடியும். ராமனிடம் அவனிடம் அணிந்திருந்த தொப்பியின் நிறம் என்ன என்று கேட்ட போது அவன் தனக்குத் தெரியாது என்றான். வினயுக்கும் தன் தொப்பியின் நிறம் தெரியவில்லை. ஆனால் ராம் சொன்ன பதிலிலிருந்து தன் தொப்பி கருப்பாகத்தான் இருக்க வேண்டுமென நினைக்கிறான். அவனால் எப்படி அவ்வாறு நினைக்க முடிந்தது?

## நாமும் வரைவோம் —— *P*யிலிருந்து ஆந்தை

*P*என்ற எழுத்திலிருந்து தூங்கும் ஆந்தையை மூன்று நிலைகளில் வரையலாம். எப்படி என்று பாருங்கள்.



## பொன்மயமான பொழுதுகள் 13ன் விடைகள்

### உலகில் எங்கு?

1. தென்-மேற்கு ஃப்ரான்சில் லாஸ்காஸ்.
2. ராஜஸ்தானில் சித்தோர்கட்.
3. ஆப்பிரிக்காவின் வடடான் ஜீனியா (கிளிமாஞ் சரோ மலை)
4. மைன்மார் (பர்மா)
5. அமெரிக்காவின் வாஷிங்க்டன் டி.சி.

### பட கேள்வி

ஆப்பிரிக்காவில் புலிகள் இல்லை.

### படப் புதிர்

1. சௌதி அரேபியா, 2. சீனா, 3. எகிப்து, 4. ஜெர்மனி, 5. பொலிவியா, 6. ஜிம்பாப்வே, 7. ஸ்பெயின், 8. மைன்மார், 9. மடகாஸ்கர்.

### வேடிக்கை வினாக்கள்

1. 50 பைசா,5 பைசா நாணயங்கள்.
2. கிளி செவிடு.
3. அக் குடும்பத்தில் ஆறு பேர்.
4. க்ரீன் லாந்து. அது கண்டு பிடிக்கப்படாது இருந்தாலும் அது இருந்ததே!
5. ஒரே சமயத்தில் இரு நண்பர்கள்.
6. கடைசி பெண்ணிற்கு ஆப்பிளுள்ள பெட்டியைக் கொடுங்கள்.
7. பொய், அவர்களது உரையாடலைக் கேட்டிருக்க முடியாது. பொய் கூறுபவர் பிறர் பொய் சொல்கிறார் என்று உண்மையைக் கூறமாட்டார்.
8. பெரிய பாதமுள்ள ஒருவர்.



# மகாபாரதம்

பாண்டவர்களின் வனவாசம் பனிரெண்டாவது ஆண்டின் முடிவை அடைந்து கொண்டிருந்தது. இந்திரன் பாண்டவர்களுக்கு உதவும் நோக்கத்துடன் ஒரு அந்தணனின் வடிவில் கர்ணனிடம் போய் அவன் உடலோடு ஒட்டி இருந்த கவசத்தையும் குண்டலங்களையும் தானமாகக் கேட்டு வாங்கி வருவது எனத் தீர்மானித்துக் கொண்டான். இதை கர்ணனின் தந்தையான சூரியன் அறிந்து ஒரு நாள் விடியும்போது கர்ணனின் கனவில் தோன்றி ''கர்ணா! அந்தணர்கள் எதைக் கேட்டாலும் நீ அதைக் கொடுத்து விடுகிறாய். இப்போது இந்திரன் அந்தணன் உருவில் வந்து உன் உடலோடு ஒட்டியுள்ள கவசத்தையும் காதுக் குண்டலங்களையும் கொடுக்கும்படிக் கேட்கப் போகிறான். நீ அவனுக்கு வேறு எதை வேண்டுமானாலும் கொடு. ஆனால் இவற்றை மட்டும் கொடுக்காதே. இவை உன்னிடம் இருக்கும் வரை உன்னை யாராலும் வெல்ல முடியாது'' என்றான்.

கர்ணனும் ''தேவா! தாங்கள் கூறியபடி என்னால் செய்ய முடியாது. அந்தணர்கள் எதைக் கேட்டாலும் கொடுப்பவன் நான். எனவே இந்திரன் வந்து என் கவசத்தையும் குண்டலங்களையும் கேட்டால் கொடுத்தே தீருவேன். இதனால் என் புகழ் மேலும் ஓங்கும்.'' என்றான்.

அப்போது சூரியதேவன் ''நீ சுத்தப் பைத்தியக்காரனாக இருக்கிறாயே. நீயே அழியும் போது புகழ் எதற்கு? போர் விரைவில் மூளப் போகிறது. நீ அர்ஜுனனை எதிர்க்கப் போகிறாய். அப்போது உன்னிடம் உன் கவசமும் குண்டலங்களும் இருந்தாலே அவனை வெல்ல முடியும். உன்னையும் யாராலும் கொல்ல முடியாது'' என்றார்.

கர்ணனும் ''தேவா! நான் யார்

—யட்சனின் கேள்விகள்—



எதைக் கேட்டாலும் கொடுப்பவன் என்கவசமும் குண்டலங்களும் என்னிடம் இல்லாவிட்டாலும் என்னால் தனியாக அர்ஜுனனை எதிர்த்து வெற்றிபெற முடியும்'' என்றான். அப்போது சூரிய தேவன் ''சரி, நீ இந்திரனுக்குக் கவசத்தையும் குண்டலங்களையும் கொடுத்தாலும் நீ அவனிடமிருந்து அரிய சக்தியுள்ள ஆயுதத்தைக் கேட்டு வாங்கிக் கொள். அது எப்படிப்பட்ட பலசாலியையும் கொன்றுவிட்டு அதை எய்தவனிடமே திரும்ப வந்துவிடும்'' என்றான்.

இதற்குள் கர்ணனின் கனவு கலைந்தது. காலையும் ஆகியது. அவன் இந்திரன் எப்போது வருவான் என்று எதிர் பார்த்துக் கொண்டிருந்தான். இந்திரனும் ஒரு அந்தணனின் வேடத்தில் உச்சி வேளைக்கு வந்து தனக்கு தானம் கொடுக்குமாறு கேட்டான். கர்ணனும் ''அந்தணரே! தங்களுக்கு என்ன வேண்டும்? எதைக் கேட்டாலும் கொடுக்கிறேன்'' என்றான். அந்தணன் வேடத்தில் வந்த இந்திரனும் ''எனக்கு உன்னோடு ஒட்டியுள்ள கவசமும், காதுக் குண்டலங்களும் வேண்டும்'' என்று கேட்டான். கர்ணனும் சிரித்தவாறே ''தேவேந்திரனே அந்தணன் வடிவில் வந்து என் கவசத்தையும் குண்டலங்களையும் கேட்கும் போது நான் கொடுக்காமல் இருப்பேனா? இவற்றைக் கொடுத்து விட்டால் நான் எளிதில் எதிரிகளிடம் தோற்று விடுவேன். அவ்வாறு தோற்காமல் இருக்க உன் அபூர்வ சக்தி ஆயுதத்தைக் கொடுத்தருள வேண்டும்'' என்றான்.

இந்திரனும் ''அதைக் கொடுக்கிறேன். ஆனால் நீ அதை ஒருவனைக் கொல்ல மட்டுமே பயன்படுத்த வேண்டும் நீ அதை எய்ததும் அது அவனைக் கொன்றுவிட்டு என்னிடமே திரும்ப வந்து விடும். இதற்குச் சம்மதித்தால் அதனை நான் உனக்குக் கொடுக்கிறேன்.'' என்றான். கர்ணனும் ''என் கடும் விரோதி ஒருவனே அவனைக் கொல்ல இதை நான் பயன்படுத்திக் கொள்கிறேன்'' என்றான்.

இந்திரனும் ''உன் அந்த விரோதி அர்ஜுனன் என்று எனக்குத் தெரியும். அவனுக்குக் கிருஷ்ணர் துணை இருப்பதால் கவலை இல்லை. நீ என் அந்த சக்தியை வேறு எந்த ஆயுதத்தையும் பயன்படுத்த முடியாமல் போயும் உன் உயிருக்கே ஆபத்து என்ற நிலையிலும்தான் பிரயோகிக்க வேண்டும். சாதாரண நிலையில் அவசரப்பட்டு நீ பிரயோகித்தால் அது உன்னையே

கொன்றுவிடும்.'' என்று எச்சரித்தான்.

கர்ணனும் ''என் உடலோடு ஒட்டியுள்ள கவசத்தை அறுத்து எடுத்துக் கொடுக்கிறேன். அதனால் என் உருவம் விகாரமாகி விடாமல் செய்ய வேண்டும்.'' என இந்திரனிடம் வேண்டினான். இந்திரனும் கவசத்தையும் குண்டலங்களையும் பெற்றுக் கொண்டு அவனது உடல் அழகாக இருக்கச் செய்ததோடு அவன் கேட்ட சக்தி ஆயுதத்தைக் கொடுத்து விட்டுச் சென்றான்.

துரியோதனனுக்குக் கர்ணன் தன் உடலோடு ஒட்டியிருந்த கவசத்தையும் குண்டலங்களையும் ஒரு அந்தணனுக்கு தானம் செய்து விட்டான் என்பது தெரிந்தது. இனி பாண்டவர்களை எப்படிப் போரில் வெல்வது என்று எண்ணிக் கவலைப்படலானான். அதைக் கண்ட கர்ணன் ''என் கவசமும் குண்டலமும் போனால் என்ன? நான் சக்தி வாய்ந்த ஆயுதத்தை இந்திரனிடமிருந்து பெற்றிருக்கிறேன். இதைக் கொண்டு பாண்டவர்களை வென்று விடலாம்'' என்று துரியோதனனைத் தேற்றினான்.

பாண்டவர்கள் துவைத வனத்தில் இருக்கையில் ஒரு பிராம்மணன் ஓடோடி வந்து அவர்களிடம் ''என் அரணிக் கட்டையை ஒரு மான் தன் கொம்பில் மாட்டி எடுத்துக் கொண்டு போய்க் கொண்டிருக்கிறது. நான் என் அரணிக் கட்டை இல்லாமல் எப்படி தீயை மூட்டுவேன்? என் நித்திய கர்மானுஷ்டானங்கள் எல்லாம் தடைப்பட்டு விடுமே. எனக்கு உதவி என் அரணிக்கட்டை எனக்குக்கிடைக்கும்படி செய்யுங்கள்'' என்று வேண்டினான்.



பாண்டவர்களும் அவனுக்கு ஆறுதல் கூறி ''கவலைப்படாதே. உங்கள் அரணிக்கட்டை உங்களுக்குக் கிடைக்கச் செய்கிறோம். உங்கள் நித்திய கர்மானுஷ்டானங்களுக்கு எவ்வித பங்கமும் ஏற்படாது. கவலையற்று இருங்கள். அந்த மான் அரணிக் கட்டையுடன் எங்கே ஓடிற்று?'' என்று கேட்டார்கள். அந்தணனும் அரணிக் கட்டையோடு உள்ள மானைக் காட்டவே, அவர்களும் அவன் காட்டிய மானைத் துரத்திக் கொண்டு சென்றார்கள். அதன் மீது அம்புகளை எய்தும் ஒரு அம்பு கூட அதன் மீது படவில்லை. அது வேகமாக ஓடிக் காட்டிற்குள் மறைந்து விட்டது. பாண்டவர்கள் ஐவரும் களைத்துப் போய் ஒரு மரத்தின் கீழ் உட்கார்ந்தனர். அப்போது நகுலன் ''இப்படி நாம் கஷ்டப்



பட என்னதான் காரணமோ?'' என்று அலுத்துக் கொண்டான். தருமரோ ''இது நம் விதியின் பயன்'' என் றார். பீமனோ ''விதியா? அன்றே துரௌபதியை சபையில் அவமானப்படுத்திய போது நான் துரியோதனனையும் அவனது சகாக்களையும் கொன்றிருந்தால் நமக்கு இந்த கஷ்டங்களெல்லாம் வந்திராது'' என்றான்.

அர்ஜுனனும் ''அப்போது நான் கர்ணனைக் கொன்றிருக்க வேண்டும்'' என்றான். சஹதேவனும் ''அந்த சகுனி மாமாவை அப்போதே ஒழித்துக்கட்டி இருக்க வேண்டும்'' என்றான். தருமரோ பேச்சை மாற்ற நகுலனிடம் ''தம்பீ! எல்லோருக்கும் தாகமாக இருக்கிறது. எங்காவது தண்ணீர் இருக்கிறதா என்று பார்த்து நீயும் குடித்து விட்டு எங்களுக்கும் எடுத்துக் கொண்டு வா'' என்று கூறினார்.

நகுலனும் மரத்தின் மேல் ஏறிப் பார்த்தான். கொஞ்ச தூரத்தில் ஒரு குளம் இருப்பது தெரிந்தது. அவன் மரத்திலிருந்து கீழே இறங்கி தான் கண்ட குளத்திற்குப் போய்த் தண்ணீர் குடித்து விட்டு மற்றவர்களுக்கும் தண்ணீர் கொண்டு வருவதாகக் கூறி விட்டுச் சென்றான். அவன் அக் குளத் தில் இறங்கித் தண்ணீர் குடிக்கப் போகையில் ஒரு குரல் ''நில். நான் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்லி விட்டுத் தண்ணீர் குடி'' என்றது. நகுலன் அதை லட்சியம் செய்யாமல் குளத்து நீரைக் குடிக்கவே அவன் அங்கேயே இறந்து விழுந்து விட்டான்.

வெகு நேரமாகியும் நகுலன் வராததால் தருமர் சஹதேவனை அனுப்பினார். அவனும் குளத்து நீரைக் குடிக்கப் போய் ஒரு குரல் கேட்ட கேள்விகளுக்கு பதில் சொல்லாமல் நீரைக் குடித்து அங்கேயே இறந்து விழுந்தான். இதற்குப் பின் சென்ற அர்ஜுனனும் பீமனும் கூட குரல் கூறியதை லட்சியம் செய்யாமல் தண்ணீரைக் குடித்து இறந்து விழுந்தனர்.

கடைசியில் தருமரே குளத்திற்குச் சென்று அதில் நீரைக் குடிக்க முயன்றார். அப்போது மற்றவர்களைத் தடுத்த குரல் அவரையும் ''நில். நான் கேட்கும் கேள்விகளுக்கு பதில் கூறி விட்டுத் தண்ணீரைக் குடி'' என்றது. தருமரும் ''யார் நீ? என் சகோதரர்கள் எளிதில் இறப்பவர்களல்லவே. அவர்கள் நால்வரும் இறந்து கிடக்கிறார்கள் என்றால் உன்னிடம் ஏதோ அபூர்வ சக்தி இருக்க வேண்டும். நீ யாரோ ஒரு மாயாவி போல் தோன்றுகிறதே''



என்று கேட்டார்.

அப்போது "நான் மாயாவி அல்ல. ஒரு யட்சன். இந்தக் குளத்தின் நீரை நீ குடிக்க வேண்டுமானால் முதலில் நான் கேட்கும் கேள்விகளுக்கு நீ பதில் கூற வேண்டும். அதன் பிறகே நீ இதன் நீரைக் குடிக்கலாம்'' எனக் கூறிய வாறே ஒரு யட்சன் அவர் முன் நின் றான். தருமரும் "சரி. நீ உன் கேள்வி களைக் கேள். முடிந்தவரை நான் பதில் கூறுகிறேன்'' என்றார்.

யட்சனும் பல கேள்விகளை தரு மரிடம் கேட்டான். அவரும் அவன் கேட்ட கேள்விகளுக்கு எல்லாம் சரி யான பதில்களையே கூறினார். இதனால் யட்சன் திருப்தி அடைந்து "இங்கு உன் சகோதரர்களெல்லாம் இறந்து விழுந்து கிடக்கிறார்கள் அவர்களில் ஒருவனுக்கு நான் உயிர் கொடுக்கிறேன். நீ யாரை உயிருடன் பார்க்க விரும்புகிறாய்?'' என்று கேட் டான். தருமரும் "நகுலனுக்கு உயிர் கொடுங்கள்'' என்றார்.

அப்போது யட்சன் "நீ பீம னையோ அர்ஜுனனையோ அடைய விரும்பாமல் நகுலனை ஏன் விரும் பிக் கேட்டாய்?'' எனவே தருமரும் "நாங்கள் மூவரும் குந்தியின் புதல் வர்கள். நகுலனும் சஹதேவனும் என் இளைய தாயாரான மாத்ரியின் புதல் வர்கள். குந்திக்கு ஒரு புதல்வனும் மாத்ரிக்கு ஒரு புதல்வனும் உயிருடன் இருக்க வேண்டும் என்று எண்ணியே அவ்வாறு கேட்டேன்'' என்றார்.

இதைக் கேட்டு யட்சன் மகிழ்ந்து "உன் நியாய புத்தியையும் தர்ம நிலையையும் பாராட்டுகிறேன். உன் சகோதரர்கள் எல்லோருக்குமே உயிர் கொடுக்கிறேன்'' எனக் கூறி எல்லோ ருக்குமே உயிர் கொடுத்தான். உடனே பீமன், அர்ஜுனன், நகுலன், சஹ தேவன் ஆகிய நால்வரும் உயிர் பெற்று எழுந்து வந்தார்கள். அவர் களுக்குப் பசியோ தாகமோ கூட இருக்கவில்லை.

அப்போது தருமர் யட்சனை வணங்கி "ஐயனே! தாங்கள் சாதா ரணப்பட்டவரல்ல. யட்சனும் அல்ல. தாங்கள் யாரென்று எங்களுக்குத் தெரி விப்பீர்களா?'' என்று வணங்கிய வாறே பணிவுடன் கேட்டார்.

யட்சனும் "நான் தர்ம தேவன். உனது தந்தை. உன்னைப் பரீட்சிக் கவே இப்படி உருமாறி வந்தேன்'' என் றான். அப்போது தருமர் "ஐயனே! ஒரு அந்தணரின் அரணிக் கட்டை ஒரு மானின் கொம்பில் மாட்டிக் கொள்ள,

அந்த மான் இந்தப் பக்கமாகத்தான் ஓடி வந்தது. அந்த அரணிக் கட்டை இல்லாவிட்டால் அந்த அந்தணரால் நெருப்பு மூட்டி ஹோமங்களையே செய்ய முடியாமல் போய்விடும். அந்த அரணிக்கட்டை கிடைக்கும் படி செய் தருள வேண்டும்'' என வேண்டினார்.

தரும தேவனும் ''நான்தான் மானாக வந்தவன். உங்களை எல் லாம் வரவழைக்கவே மானாகி அரணிக் கட்டையுடன் ஓடி வந்தேன். இதோ அந்த பிராம்மணனின் அரணிக் கட்டை. இதை எடுத்துக் கொள். உனக்கு வரம் கொடுக்கிறேன். என்ன வேண்டுமென்று கேள்'' என்றான். தருமரும் ''இப்போது எங்களுடைய வனவாச காலம் பனிரெண்டு ஆண்டு கள் முடியப் போகிறது. இனி ஓராண்டு காலம் நாங்கள் அஞ்ஞாத வாசம் புரிந்தாக வேண்டும். அதுவும் வெற்றிகரமாக முடிய அருள் புரியுங் கள்'' என்று கேட்டுக் கொண்டார். தரும தேவனும் அவ்வாறே நடக்கும் எனக் கூறிவிட்டு மறைந்தான்.

பாண்டவர்கள் அரணிக் கட் டையை எடுத்துக் கொண்டு போய் பிராம்மணனிடம் கொடுத்தார்கள். அவனும் தம் நித்திய கர்மானுஷ் டானங்களைத் தங்கு தடை இல்லா மல் செய்து வரலானான். அவனது ஆசிகளும் பாண்டவர்களுக்கு கிடைத் தன. பாண்டவர்களின் வனவாச காலமும் விரைவிலேயே முடிந்தது.

அவர்கள் அதுவரை தம்மோடு இருந்த பிராம்மணர்களுக்கு நமஸ் கரித்து விடை கொடுத்தவாறே ''பிராம்மணோத்தமர்களே! நிபந் தனைப்படி நாங்கள் ஒரு வருட காலம் அஞ்ஞாதவாசம் செய்தாக வேண்டும். எனவே உங்களை விட்டு நாங்கள் பிரிய வேண்டி உள்ளது. எங்களுக்கு விடை கொடுங்கள்'' என்றனர். அந்த பிராம்மணர்களும் அஞ்ஞாத வாசம் நல்லவிதமாக நடக்க வேண்டுமென்று ஆசிகள் கூறினார்கள்.

அப்போது தௌம்யரும் ''விரை விலேயே உங்கள் கஷ்டங்களெல் லாம் விலகிப் போய்விடும்'' என்றார். பாண்டவர்கள் துரௌபதியையும் தௌம்யரையும் அழைத்துக் கொண்டு அங்கிருந்து கிளம்பிச் சற்று தூரம் போய் ஓரிடத்தில் அமர்ந்து அஞ்ஞாத வாசத்தை எவ்வாறு கழிப்பது என்று யோசிக்கலானார்கள்.



# அம்புலிமாமா செய்திகள்

**வரவேற்பு ஏற்பாடுகள்**

இருபதாம் நூற்றாண்டு 2000 டிசம்பர் 31ந் தேதியன்று முடிவடைகிறது. இருபத்தொன்றாம் நூற்றாண்டை பிரம்மாண்ட அளவில் வரவேற்க உலகின் எல்லா நகரங்களிலும் ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன. 2000 ஜனவரி முதல் தேதியிலிருந்து இந்த விழாக்கள் ஆரம்பமாகி விடும். இந்த நூற்றாண்டை முதல் முதலில் வரவேற்கும் நல் வாய்ப்பு நியூஜிலாந்தின் ஓக்லண்ட் நகரத்திற்குக் கிடைக்கிறது.

**உயரமான கோபுரம்**

தாய்வான் நாட்டின் தலைநகர் தாய்பீ நகரில் இரண்டாண்டிற்குள் மிக உயரமான கோபுரத்தைக் கட்டி முடிக்கப் போகிறார்கள். இதன் உயரம் 550 மீ. இது இப்போது கனடா நாட்டின் டோரண்டோவிலுள்ள மிக உயரமான சி.என். டவரை விட 30 மீட்டர் அதிக உயரமானது. 73,000,00 அமெரிக்க டாலர் செலவில் கட்டப்படும் இந்த தாய்பீ டவர் இப்போது உயரமாகக் கருதப்படும் டோகியோ டவரையும் (330 மீ உயரம்) ஈஃபல் டவரையும் (330 மீ உயரம்) விட மிக மிக உயரமானது.

**தொடர் பாராயணம்**

இந்த ஆண்டில் ஏப்ரல் 16ந் தேதி ஸ்ரீராம நவமியாக நாடெங்கும் கொண்டாடப்பட்டது. இதற்கு ஐந்து நாட்களுக்கு முன் சில பக்தர்கள் சரயு நதிக்கரையில் 'மகா யக்ஞம்' ஒன்றை நடத்தினார்கள். இராமபிரான் சரயு நதியைக் கடந்து வனவாசம் செய்யச் சென்றதாக இராமாயணம் கூறுகிறது. இப்போது ஆரம்பிக்கப்பட்ட மகா யக்ஞம் அடுத்த ஆண்டு இராம நவமி வரை. அதாவது 1998 ஏப்ரல் 20ந் தேதி வரை நடைபெறும். இக்காலத்தில் இடைவிடாது தொடர்ந்து ராமபிரானின் திருநாமத்தை ஜெபித்துக் கொண்டிருக்க 21,000 பண்டிதர்கள் நியமிக்கப்பட்டு உள்ளனர்.

**ஃப்ரெஞ்சில் மொழியாக்கம்.**

சிக்கியர்களின் புனித நூலான 'கிரந்த சாஹப்' அண்மையில் ஃப்ரெஞ்ச் மொழியில் மொழியாக்கம் செய்யப்பட்டுள்ளது. 1676 பக்கங்களைக் கொண்ட இதில் 16 பக்க அனுபந்தமும் உள்ளது. கனடாவில் அரசாங்க அதிகாரியாக இருந்து அண்மையில் ஓய்வு பெற்ற டாக்டர் ஜெர்னாயில் சிங் இந்த மொழியாக்கத்தைச் செய்துள்ளார். இதற்கு அவருக்கு 12 ஆண்டுகள் பிடித்தன. அயல் நாடுகளுக்குச் சென்று அங்கே தங்கி விட்ட சிக்கியர்களில் பெரும் பாலோர் கனடாவில்தான் உள்ளனர். கனடாவில் ஆங்கிலமும் ஃப்ரெஞ்சும் அரசாங்க மொழிகள். கனடாவிலும் ஃப்ரெஞ்ச் மொழி பேசுபவர்கள் இருக்கிறார்கள். நம் நாட்டிலும் பாண்டிச்சேரி, காரைக்கால், மாஹி, யானாம் பகுதிகளில் இப்போதும் ஃப்ரெஞ்ச் மொழி பேசுவோர் பலர் உள்ளனர்.

**குழந்தைகள் ஏன் அழுகின்றன?**

பால்வேண்டுமென்றோ, தாயார் வேண்டுமென்றோ, தூங்க வேண்டுமென்றோ சிறு குழந்தைகள் அழுகின்றன. இதை அவற்றின் தாய் தந்தையர் அறிவார்கள். இது பற்றி அமெரிக்காவிலுள்ள ஸ்பீச் ரெக்கக்னேஷன் அண்ட் லாங்க்வேஜ் அண்டர்ஸ்டாண்டிங் சர்வீஸஸ் லாபரட்ரியும், கனடா பல்கலைக் கழகத்தின் பிரிட்டிஷ் கொலம்பியா விஞ்ஞானிகளும் சில ஆய்வுகளைச் செய்து வருகிறார்கள். குழந்தைகள் பலவிதமாக அழுவதை ஒலிப்பதிவு செய்து அவற்றை ஆராய்ந்து வருகிறார்கள். குழந்தைகளின் அழுகையைக் கொண்டு அவை என்ன விரும்புகின்றன என்பதை அவர்கள் கூறுகிறார்கள்.

அம்புலிமாமா
அனுபந்தம்
104



நம் நாட்டுக்
கண்கவர் காட்சிகள்

# கோணார்க் சூரியதேவன் ஆலயம்

ஒரிஸ்ஸா மாநிலத்தில் கோணார்க்கிலுள்ள சூரியதேவனின் ஆலயம் புகழ் பெற்றது. இது 13வது நூற்றாண்டில் கட்டப்பட்டது. நம் நாட்டின் உயரமான ஆலயங்களில் இதுவும் ஒன்றாகும். இதன் உயரம் சுமார் 200 அடிகள், நுழைவாசலிலுள்ள படிகள் ஒவ்வொன்றிலும் இருபுறத்திலும் குதிரைச்சிலைகள் உள்ளன. முழு ஆலயம் ஒரு ரதத்தின் வடிவில் அமைக்கப்பட்டுள்ளது. சூரியபகவான் தம் தேரில் ஏழு குதிரைகளைப் பூட்டிக் கொண்டு வானவீதியில் செல்வதாக நம் புராணங்கள் கூறுகின்றன.



கங்க வம்சத்து நரசிங்க தேவ மன்னர் இந்த ஆலயத்தை நிர்மாணித்தார். 1200 சிற்பிகளும், 36 ஆண்டுகள் தொடர்ந்து வேலை செய்து இந்த ஆலயத்தைக் கட்டி முடித்ததாகக் கூறுகிறார்கள். இதைக் கட்டி முடிக்க 40 கோடி ரூபாய்கள் செலவாயிற்றாம்.





கோணார்க் ஆலயத்திலுள்ள சிற்பங்கள் நம்மை மெய் சிலிர்க்க வைக்கின்றன. மனம் கவரும் விதத்தில் ஒடிஸ்ஸி நடனக் கலையைப் பின்னணியாகக் கொண்டுள்ள பல சிற்பங்கள் பார்ப்போரை பிரமிக்க வைக்கத் தக்கதாய் இதில் அமைக்கப்பட்டுள்ளது இந்த ஆலயத்தின் சிறப்பான அம்சமாகும்.

புராணகால மன்னர்கள் :

# ஜானஸ்ரூதி - ரைக்கவர்

ஜானஸ்ரூதி மன்னன் நீதி தவறாதவன். நேர்மையானவன். மக்களின் குறைகள் பற்றி தினமும் அதிகாரிகளிடம் விசாரித்து அவற்றைப் போக்கி விட்டே தூங்கச் செல்வான். மக்கள் வசதியுடன் வாழ்ந்து வரவே அவன் விரும்பினான்.

ஒரு பௌர்ணமி இரவில் அவன் தன் அரண்மனையின் உப்பரிகையில் உலாவிக் கொண்டிருக்கையில் ஆகாயத்தில் சில அன்னப் பறவைகள் தம்முள் பேசியவாறே பறந்து சென்று கொண்டிருந்தன. அதை ஜானஸ்ரூதி கேட்டான். அவனுக்குப் பறவைகளின் மொழி தெரியும்.

ஒரு பறவை "இந்த அரண்மனையின் மேல் தளத்தில் ஒரு அதிசய வெளிச்சம் தெரிகிறதே" எனவே இன்னொரு பறவை "ஆம். நீ காண்பது ஜானஸ்ரூதி மன்னரின் ஒளி. அவர் சத்தியசந்தர். நேர்மையானவர். அதனால்தான் அவரைச் சுற்றி இந்த ஒளி வீசுகிறது. ஆனால் இதை அவரால் காண முடியாது" என்றது. அப்போது முன் பேசிய பறவை "இவர் நல்ல அரசரே. ஆனால் நேற்று நாம் பார்த்த ரைக்கவ மன்னரின் ஒளி இவரது ஒளியை விடப் பிரகாசமாக இருந்ததே" என்றது. அதன் பின் அந்த அன்னப் பறவைகள் வெகுதூரம் போய் மறைந்து விட்டன.

மன்னன் அந்த அன்னப் பறவைகள் பேசியதைக் கேட்டு மகிழ்ந்து உலகில் தன்னை விட உயர்ந்த மன்னன் இருப்பதை அறிந்து கொண்டான். அவன் அன்றிரவு நன்கு தூங்கி மறுநாள் காலை தன் மந்திரிகளையும் தூதுவர்களையும் அழைத்து ரைக்கவ மன்னர் பற்றிய விவரங்கள் சேகரிக்கும்படிக் கூறினான். அதன் பின் அவனே சென்று ரைக்கவ மன்னனைக் கண்டு அவனிடம் பேசினான். இளம் வயதினனான ரைக்கவ மன்னனின் நடத்தைக் கண்டு திருப்தி அடைந்து ஜானஸ்ரூதி அவனுக்குத் தன் மகளை மணம் செய்து வைத்தான்.

ஜானஸ்ரூதி பணிவும், கர்வம் சற்றும் இல்லாதவன். தன்னைவிட உயர்ந்தவனைப் போற்றும் பண்புடையவன். அதனால் அவன் புகழ் ஓங்கியது.



## உங்களுக்கு தெரியுமா?

## அற்புத ஆனந்த நிகழ்ச்சி

'ஓபெரா' என்பது இசை நாட்டிய நிகழ்ச்சி. இந்த இசை நாடகத்தில் கலைஞர்களே பாடி நடிக்கிறார்கள். அவர்களின் பின்னால் இசை, நாட்டியக் கலைஞர்களின் குழுவும் இருக்கும். பெரிய அலங்காரத் திரைகள், கலைஞர்கள் அணிய ஆடம்பர ஆடைகள் பல வண்ணங்களில் இதில் காணலாம். இந்த இசை நாடக நிகழ்ச்சி 16வது நூற்றாண்டில் ஆரம்பமாகியது. கிரேக்க, ரோமானியப் புராணங்களிலிருந்து கதைச் சம்பவங்களைக் கொண்டு வெகு காலம் வரை இந்த 'ஓபெரா' நிகழ்ச்சிகள் நடந்து வந்தன. இவை பணக்காரர்களின் பொழுது போக்காக இருந்து வந்தன. 18வது நூற்றாண்டின் மத்தியில் இசை நாடகங்களுடன் இந்தப் பழங்கால் இசை நாட்டிய நிகழ்ச்சிகள் சம்பிரதாயம் வழுவாமல் நடத்தப்பட்டே வருகின்றன.





## வானவில்

### தாமரை மலர் ஆலயம்





தாமரை மலர் ஆலயம் என்றா ஆச்சரியப்படுகிறீர்கள்? நம் நாட்டுத் தலைநகரிலுள்ள இந்தத் தாமரை மலர் ஆலயம் மிகவும் பெயர் பெற்றது. 8000 தொழிலாளிகள் ஆறரை ஆண்டுகள் இரவு பகலாக வேலை செய்து இந்த ஆலயத்தைக் கட்டி முடித்தார்கள். இதற்கு 120 லட்ச அமெரிக்க டாலர்கள் செலவாயிற்றாம். இந்த தாமரை மலர் ஆலயத்தை பஹயா ஆலயம் என்றும் கூறுகிறார்கள். இந்த ஆலயத்தின் வெளிப்புறம் மூன்று ஜோடி மலர் இதழ்கள் உள்ளன. இவற்றுள் ஒன்பது மலர் இதழ்கள் உள்ளன. இந்த ஆலயம் வெள்ளை வெளேரென்று காட்சி அளிக்கிறது. இதைக் கட்டுவதற்காக சிறப்பு சிமிண்டைக் கொரியா நாட்டிலிருந்து வரவழைத்தார்கள்.




# எல்லாம் அவன் செயல்!

*(சென்ற இதழின் தொடர்ச்சி)*

மன்னன் குறிப்பிட்ட நாளில் ஒரு சிறு கப்பலில் ஒரு மாலுமியும் நான்கு வீரர்கள் மட்டுமே ஏழை மனிதனுடன் பயணமானார்கள். புறப்படும் முன் மன்னன் அந்த ஏழையிடம் "இன்றிலிருந்து சரியாக ஆறு மாதங்கள் முடிந்ததும் இதே கப்பல் இதே ஆட்களுடன் உன்னை அழைத்து வர அந்த ராட்சஸத் தீவிற்கு வரும். நீ அதுவரை உயிருடன் இருந்தால் கரையில் வந்து நில். அப்போது இவர்கள் சரியாக மூன்று மணி நேரமே உனக்காக அங்கு காத்திருப்பார்கள்." என்றான். ஏழை மனிதனும் சரி எனக் கூறுவது போலத் தலையை ஆட்டினான். மனதில் கடவுளைப் பிரார்த்தித்தவாறே கப்பலில் ஏறிக் கொண்டான்.

கப்பல் வேகமாகச் சென்று குறித்த காலத்திற்கு முன்பே ராட்சஸத் தீவை அடைந்தது. மாலுமி நூலேணி கட்டி ஏழை மனிதனைக் கரையில் இறக்கினான். வீரர்கள் அவனுக்கு வேண்டிய பொருள்களையும் உணவையும் மூட்டைகளாக கட்டி கரையில் விட்டெறிந்தார்கள். அதன் பிறகு அக் கப்பல் திரும்பிப் போய்விட்டது. ஏழை மனிதன் அந்தத் தீவில் தனியாக விடப்பட்டான்.

அதுவரை அவன் தனியாக இருந்ததே இல்லை. அதனால் அவனுக்கு துக்கம் நெஞ்சை அடைத்துக் கொண்டு வந்தது. அவன் கரை இறங்கிய இடத்திலேயே குப்புறப் படுத்துக் கொண்டு விக்கி விக்கி அழுதான். "கடவுளே! என் தலையில் இப்படியா எழுதினாய்? இப்படித் தனிமையில் வாடுவதை விட ஒரேடியாகச் சாவதே மேல். எனக்கு இப்போதே சாவைக் கொடு. ராட்சஸன் என்னை அணுகும் போதே என் இதயம் நின்று நான் இறந்து விடவேண்டும். எப்படியோ ஒரு நொடியில் என் உயிர் போய் விட வேண்டும்" என்று பலவாறு அவன்

—பாபுரா நாசம் சாமா—

எண்ணலானான்.

இந்த நிலையில் அவனுக்குப் பசியே எடுக்கவில்லை. ''பசித்தால் மட்டும் சாப்பிடவா போகிறேன்! போகிற உயிருக்கு சாப்பாடு எதற்கு?'' என எண்ணி அவன் சாப்பாட்டு மூட்டையைப் பார்க்கக்கூடவில்லை. அவன் அங்கேயே படுத்துக் கண்ணை மூடிக் கொண்டான் சற்று நேரத்தில் தூங்கியும் போய்விட்டான். மறுபடியும் அவன் கண் விழித்தபோது கதிரவனின் கிரணங்கள் அவன் மீது பட்டுக் கொண்டிருந்தன. அவன் தன்னையே ஒரு முறை பார்த்துக் கொண்டான். உயிரோடு இருப்பது தான் இன்னமும் அவன் ஆச்சரியப்பட்டான். ஏனெனில் அவனைத் தேடிக்கொண்டு எந்த ராட்சஸனும் வரவில்லை!

ஆனாலும் ஏழை மனிதன்தான் இருந்த இடத்தை விட்டு நகரவில்லை. பசித்தபோது சாப்பாட்டு மூட்டையிலிருந்து எதையாவது எடுத்துத் தின்றான். அன்றிரவும் அங்கேயேதான் படுத்துத் தூங்கினான். இப்படி மூன்று நாட்கள் கழிந்தன. அப்போதும் தான் உயிருடன் இருந்தது அவனுக்கு ஆச்சரியத்தையே அளித்தது. ஆனால் அவன் மனதில் தைரியமும் உற்சாகமும் தோன்றின. அதனால் இனி மேல் என்ன வேண்டுமானாலும் நடக்கட்டும் என்று எண்ணி அவன் எழுந்து அங்குமிங்கும் திரிந்தான். எங்கும் அவன் ராட்சஸனைப் பார்க்கவில்லை. மாலையாகி இருட்டும் போது பழ மரங்கள் நிரம்பிய ஒரு பகுதிக்குள் போய் அவன் படுத்து உறங்கினான்.

நான்காவது நாள் காலையில் எழுந்து தீவிற்குள் சென்றான். அவன் அத்தீவின் நடுப் பகுதியை அடைந்தான். அங்கு அவன் கண்ட காட்சி அவனை மலைக்க வைத்தது பரந்த வெளியில் மிகப் பருமனான ஒரு மனிதனின் எலும்பு கூடு கிடந்தது. அதன் நீள அகலத்தைக் கொண்டு அது ஒரு ராட்சஸனுடையதாகத்தான் இருக்க வேண்டுமென்று அவன் ஊகித்து விட்டான். அந்தத் தீவில் ராட்சஸன் நீண்ட காலமாக இருந்திருக்கிறான். அவன் கடலில் அவ்வழியே செல்லும் கப்பல்களைக் கொள்ளையடித்தும் தப்பித் தவறி அத்தீவிற்குள் வந்த மனிதர்களைக் கொன்று விழுங்கியதால் யாருமே அத் தீவிற்கு வெகு காலம் வரை செல்லவில்லை. அதற்குக் காரணம் அந்த ராட்சஸனைப் பற்றிய பயமே. வருடக் கணக்கில்





எந்த மனிதனும் அந்தத் தீவின் பக்கம் வராததால் ராட்சஸன் தன் பசியைத் தீர்த்துக் கொள்ள முடியாமல் அதனால் வாடி இறந்து போயிருக்க வேண்டுமென்று அவன் ஊகித்து விட்டான்.

ராட்சஸனை இறக்கச் செய்ததும் தன்னை அங்கு உயிருடன் இருக்கச் செய்ததும் அந்தக் கடவுளே என்று அவன் எண்ணினான். அதனால் அவனது மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லாது போயிற்று. அவன் கடவுளுக்கு நன்றி செலுத்தினான்.

தீவிலிருந்த ராட்சஸன் இறந்து விட்டதால் இனி பயமில்லை என்று எண்ணி ஏழை மனிதன் மேலும் பல இடங்களைச் சுற்றிப் பார்த்தான். ஓரிடத்தில் ஒரு மரத்தின் கீழ் நவரத்தினங்களும் தங்க நகைகளும் குவியலாக வைக்கப்பட்டிருப்பதை அவன் கண்டான் அதைக் கண்டு ஆச்சரியப்பட்டு அவன் தன் மனதில் ''இவை யாவும் ராட்சஸன் கடலில் வழி மறித்து வியாபாரிகளிடமிருந்து கைப்பற்றியவைகளாகத்தான் இருக்க வேண்டும். பாவம்! எவ்வளவு வியாபாரிகளும் மாலுமிகளும் இவற்றைப் பறி கொடுத்தவர்களோ?'' என்று எண்ணி அவர்களுக்காகப் பரிதாபப் படலானான் அவன் வெகு நேரம் அங்கேயே நின்று யோசித்து விட்டு ''இதை என் கண்ணில் பட வைத்ததும் அந்தக் கடவுளின் செயலே. இவற்றை எனக்குக் கொடுத்து என்னை வாழச் சொல்லி அவர் எனக்குக் கட்டளை இடுவது போல் உள்ளது. எனவே எல்லாம் அவன் செயல் என்று எண்ணி அவருக்கு நன்றி செலுத்தி இவற்றில் கொஞ்சம் நான் எடுத்துக் கொள்கிறேன்'' என்று எண்ணி கடற்கரைக்குத் திரும்பிச் சென்றான். அங்கிருந்த தன் உணவு மூட்டைகளில் பெரிதாக இருந்தவற்றைக் காலி செய்து உணவுப் பொருள்களை ஓரிடத்தில் பத்திரமாக வைத்தான். பிறகு அந்த இரு பைகளையும் எடுத்து கொண்டு நவரத்தினங்களும் நகைகளும் குவித்து வைக்கப்பட்டிருந்த இடத்தை அடைந்தான்.

அந்தப் பைகள் இரண்டிலும் நவரத்தினங்களையும் தங்க நகைகளையும் போட்டு அவன் நிரப்பினான். அவ்வாறு செய்கையில் அவனது கைகளில் கீறல்கள் ஏற்பட்டு காயங்களாகின. ஆயினும் அதை லட்சியம் செய்யாமல் பைகளை நிரப்பிக் கட்டினான். அப்போது சற்று தூரத்தில் ஒரு சிறு

தோல் பை கிடப்பதைக் கண்டு அங்கு போய் அதனை எடுத்தான். அப்பைக் குள் என்ன உள்ளது என்று அவன் பார்த்த போது அதில் ஒரு வைரக்கல் இருந்தது. அதை அவன் கையில் எடுத் ததும் அவனது காயங்கள் மறைந்தன. ரத்தம் கசிவதும் நின்றது. அந்த வைரக் கல்லுக்கு காயங்களை குணப்படுத் தும் சக்தி இருப்பதை அறிந்து கொண் டான்.

தனக்குப் பொன்னும் நவரத் தினங்களும் கிடைக்கச் செய்தவர் ஆண்டவரே என எண்ணி அவரைத் துதித்தான். அவன் அந்த வைரக் கல்லை சிறு தோல் பையில் வைத்து எடுத்துக் கொண்டும் தான் நவரத் தினங்களையும் தங்க நகைகளையும் போட்டு நிரப்பிய இரு பைகளையும் சுமந்து கொண்டும் அவன் கடற் கரைக்கு வந்தான்.

அப்போது முதல் அவன் அத்தீவிலி ருந்து வெளியேறும் வழியைப் பற்றி யோசிக்கலானான். அதற்கு ஏதாவது ஒரு கப்பல் அவ்வழியே வந்தால் அதை எப்படியாவது அங்கு வர வைத்து அதில் ஏறிக் கொண்டு அத் தீவை விட்டு வெளியேற வேண்டு மென எண்ணினான். அதற்கும் கட வுள்தான் வழி காட்ட வேண்டுமென எண்ணி அவரைப் பிரார்த்தித்தான்.

சில நாட்களுக்குப் பிறகு அத்தீவின் கடற்கரையிலிருந்து சற்றுத் தள்ளிக் கடலில் ஒரு கப்பல் வருவதை அவன் கண்டு தன் மேல்த் துண்டை எடுத்து பலமாக ஆட்டி அக் கப்பலில் இருந்தவர்களின் கவனத்தைத் தன் பக்கம் இழுத்தான். கப்பலும் அவனிருந்த கரைக்கு வந்த அவனை



யும் அவனது மூட்டைகளையும் ஏற்றிக் கொண்டது.

கப்பலில் இருந்தவர்கள் அவனைச் சூழ்ந்து கொண்டு "ஐயா! நீங்கள் யார்? இந்த தீவிற்கு வந்து எப்படி அகப்பட் டுக் கொண்டீர்கள்? இது ராட்சஸத் தீவாயிற்றே. இங்கு நீங்கள் உயிருடன் இருப்பதே எங்களுக்கு மிகுந்த ஆச் சரியத்தை அளிக்கிறது." என்று கேட் டார்கள். ஏழை மனிதனும் "ஐயா! என் பெயர் சிவதாசன். எனது ஊர் கும்பிபுரம். நான் வியாபாரியே, நான் கடல் கடந்து சென்று வியாபாரம் செய்ய எண்ணினேன். என் நண்பர்கள் என்னை அவ்வாறு செய்ய வேண்டாம் என்று தடுத்தார்கள். என்னிடம் போதிய பணம் இல்லாது போயினும் கடல் கடந்து போய் வியாபாரம் செய்ய வேண்டுமென்ற ஆசை மட்டும்



இருந்தது. என் பணக்கார நண்பன் ஒரு வனிடம் பணம் கேட்டேன். அவனோ ''நீ ராட்சஸத் தீவில் ஒரு வார காலம் இருந்து விட்டு திரும்பி வந்தால் உனக்கு லட்சம் வராகன்கள் கொடுக்கிறேன்'' என்றான். அவனே இத் தீவிற்கு வர உணவும் மற்ற பொருள்களும் கொடுத்து இத் தீவில் என்னை விட்டுப் போய்விட்டான். ஒப்பந்தப்படி இத்தீவிலிருந்து நான்தான் எப்படியாவது திரும்பிச் செல்ல வேண்டும். நான் ராட்சஸத்தீவிற்கு வந்து இன்றோடு பத்து நாட்களாகி விட்டன. நான் அத்தீவில் இறங்கிய இடத்தில் உட்கார்ந்து எங்கும் போகாமல் பத்து நாட்களைக் கழித்தேன். இந்தக் கப்பலைக் கண்டதும் உதவிக்கு அழைத்தேன்'' என்றான்.

அப்போது கப்பலில் இருந்தவர்கள் ''பத்து நாட்கள் ராட்சஸத் தீவில் இருந்து விட்டு உயிரோடு திரும்பியது அதிசயம்தான். அந்த தீவில் உண்மையிலே ராட்சஸன் இருக்கிறானா?'' என்று கேட்டார்கள். சிவதாசனும் ''அது பற்றி எனக்குத் தெரியாது. நான் கடற்கரையிலிருந்து ஓரடி கூட உள்ளே செல்லவில்லை. நான் அங்கே இருந்த வரை எந்த ராட்சஸனையும் பார்க்கவில்லை. எந்த ராட்சஸனும் என்னைத் தேடிக் கொண்டும் வரவில்லை. எனக்கும் ராட்சஸனின் நடமாட்டம் இருப்பது கூடத் தெரியவில்லை'' என்றான். அதன் பிறகு அவன் அவர்களிடம் அக்கப்பல் எங்கு போகிறது என்று கேட்டான்.

அவர்களும் ''இந்தக் கப்பல் உங்கள் கும்பிபுரத்தை அடுத்துள்ள மாதங்கபுர வியாபாரிகளுக்குச் சொந்தமானது. இப்போது சிங்களத் தீவிற்குப் போய்க் கொண்டிருக்கிறது. வழியில் தென்படும் தீவுகளில் தங்கி அங்கும் வியாபாரம் செய்து விட்டுச் செல்லும்'' என்றார்கள். அக்கப்பலில் இருந்த வியாபாரிகளில் வயதில் பெரியவனான மணிகண்டன் என்பவனுடன் சிவதாசன் நெருங்கிப் பழகினான். அவனிடம் வியாபார சம்பந்தமாகப் பேசி சிவதாசன் பல விஷயங்களைத் தெரிந்து கொண்டான்.

சில நாட்களுக்குப் பின் கப்பல் தேங்காய்த் தீவை அடைந்தது. அப்போது மணி கண்டன் ''சிவதாசா! இங்கு தென்னையின் பல பொருள்கள் கிடைக்கும். இப் பொருள்களுக்கு சிங்களத் தீவிலும் இன்னும் பல தீவுகளிலும் நல்ல கிராக்கி உள்ளது'' என்றான். சிவதாசன் மணிகண்ட

னுடன் அந்தத் தீவில் இறங்கினான். மணி கண்டன் கூறிய பொருள்களை அவன் வாங்கி கப்பலுக்கு எடுத்து வந்து பத்திரப் படுத்தி வைத்தான்.

அதன் பின் மணி கண்டனும் சிவ தாசனும் அத்தீவில் உலாவச் சென் றனர். அப்போது ஒருகல்தடுக்கி மணி கண்டன் குப்புற விழுந்து விட்டான். அதனால் ஏற்பட்ட காயத்தால் அவனால் அன்றிரவு சரியாகத் தூங்கக் கூட முடியவில்லை. அவன் வலி தாங்க முடியாமல் புரண்டு புரண்டு படுத்துக்கொண்டிருந்தான் அப்போது சிவதாசன் அங்கு வந்து ''நீங்கள் வலி யால் துடிப்பதைக் காண என்னால் சகிக்க முடியவில்லை.'' எனக் கூறித் தன்னிடமிருந்த வைரக் கல்லை எடுத்து மணிகண்டனின் காயங்களின் மீது வைத்தான். மறு விநாடியே அக் காயங்கள் மறைய அவனது வலியும் போய்விட்டது.

அதைக்கண்ட மணிகண்டன் ''ஆச் சரியமாக இருக்கிறதே. சிவதாசா! உண்மையிலே நீ வியாபாரிதானா?'' என்று கேட்டான். சிவதாசனும் ''இம் மாதிரிக் கேள்வி வரும் என்றுதான் எல்லோர் முன்னும் உங்கள் காயத் தைப்போக்கவில்லை. உங்கள் அவஸ் தையைக் காணச் சகியாமல் யாரும் இல்லாத வேளையில் வந்து உங்கள் காயத்தை குணப்படுத்தினேன்'' எனக் கூறி ''ஐயா! நீங்கள் வயதிலும் அனுப வத்திலும் என்னைவிட முதிர்ந்த வர்கள். நற்குணங்கள் கொண்டவர், இப்போது நான் வியாபாரி என்பது உண்மையே. என் கடந்த காலத்தைப் பற்றி எதுவும் கேட்காதீர்கள். எனது இந்த நிலைக்குக் காரணமானவரிடம் முதலில் பேசி விட்டுப் பிறகே மற்ற வர்களிடம் என்னைப் பற்றி கூறு வேன். எனக்கு எப்போதும் ஆண்ட வன் மீது முழு நம்பிக்கை உண்டு. என் தலையில் அவர் என்ன எழுதி இருக் கிறாரோ அதுதான் நடக்கும். எனது இந்த நம்பிக்கைதான் என் தற்போ தைய நிலைக்குக் காரணம். வியா பாரத்தில் எனது முதலாவது ஆசான் தாங்களே. என்னை நம்பி ஆசிகள் அளியுங்கள்'' என்று வேண்டினான்.

மணிகண்டன் அது கேட்டு ஆச்சரி யப்பட்டான். பிறகு முழுமனதுடன் தன் ஆசிகளை சிவதாசனுக்கு அளித் தான்.

(அடுத்த இதழில் முடிவுறும்)






# வைத்தியரின் சிகிச்சை!

ஒரு கிராமத்தில் திருவேங்கடம் என்ற பணக்காரன் இருந்தான். அவனைப் போலக் கருமி உலகில் எங்கும் இல்லை என்றே கூறலாம். பைசா செலவு செய்யப் பத்து முறை யாவது யோசித்துச் செலவும் செய்யா திருப்பவன்.

ஒரு முறை திருவேங்கடத்திற்குக் கண் நோய் கண்டது. கண்ணிலிருந்து நீர் வடிந்து கொண்டிருந்ததோடு மிக வும் எரிச்சல் கண்டு வலிக்கவும் செய் தது. இதனால் அவனால் எதையும் சரி யாகப் பார்க்க முடியவில்லை. அந்த வட்டாரத்தில் ஒரே ஒரு வைத்தியர் தான் இருந்தார். அவரது சிகிச்சை உடனேயே நோயைப் போக்கியதால் மக்கள் அவர் மீது முழு நம்பிக்கை வைத்து அவரிடம் சிகிச்சை பெறச் சென்றனர்.

வைத்தியர் வேதாசலமும் எல்லோ ருக்கும் சரியானபடி சிகிச்சை அளித் தாலும் அவர் சிகிச்சைக்காக பணம் வாங்கிக் கொள்வதிலும் மருந்துகள் கொடுப்பதிலும் சில கொள்கை களைக் கொண்டிருந்தார். ஏழைகளி டம் அதிகப் பணம் வாங்காமல் அவர் கள் கொடுத்ததை ஏற்று ஏதாவது ஒரு குளிகை அல்லது மாத்திரை என்று கொடுத்து அனுப்பி விடுவார். அத னால் அவர்கள் குணமடைந்தும் விடு வார்கள்.

பணக்காரர்களுக்கோ லேகியம் சூர்ணம், பஸ்பம், தைலம், கிருதம் என்றெல்லாம் பல மருந்துகளைக் கொடுத்து நிறைய பணத்தையும் கேட்டு வாங்கி விடுவார். திருவேங் கடம் அவரிடம் சிகிச்சை பெறச் சென்றபோதெல்லாம் நூறு இருநூறு ரூபாயெனக் கறந்து கொண்டு விலை யுயர்ந்த மருந்துகளைக் கொடுத்து அவற்றின் விலையையும் கொடுக்க வைத்தார்.

இப்போதும் திருவேங்கடத்திற்கு அவரிடம் தான் போக வேண்டி வந்

—காரை குருமூர்த்தி—

தது. தான் பணக்காரனாகப் போனால் வைத்தியர் தன்னிடமிருந்து நிறையப் பணம் வாங்கி விடுவாரே என நினைத்து அவன் மனம் கலங்கினான். அதனால் அவன் பரம ஏழை போலத் தோன்ற கிழிசல் சட்டையையும் ஒட்டுப் போட்ட வேஷ்டியையும் அணிந்து கொண்டு வெற்றிலை பாக்கில் கால் ரூபாய் நாணயம் ஒன்றை வைத்து எடுத்துக் கொண்டு வைத்தியர் இருக்கும் ஊருக்கு போனான். வைத்தியர் இருக்கும் ஊரை அடைந்து கால் ரூபாயை அவரிடம் கொடுத்துத் தன் கண் நோய் பற்றிக் கூறி அதற்கு மருந்து கொடுக்குமாறு வேண்டினான்.

அவரும் கால் ரூபாயை வாங்கிக் கொண்டு ''நீ தினமும் நான்கு முள்ளங்கிகளை நறுக்கி அவற்றில் உப்பைப் தோய்த்து வை, முள்ளங்கியிலிருந்து நீர் வடியும். அந்த நீருடன் பெருங்காயத்தைச் சேர்த்து நாற்பது நாட்களுக்குத் தொடர்ந்து சாப்பிடு. நீர் வடிந்த முள்ளங்கியை உலர வைத்து தினமும் இரவில் சாப்பிட்டு வா. உன் கண் நோய் நாற்பது நாளில் போய்விடும்'' என்று கூறி அனுப்பினார்.

திருவேங்கடம் தன் ஊருக்கு வந்து வைத்தியர் கூறியது போலச் செய்து வந்தான். ஆனால் நாற்பது நாட்களானதும் அவனது கண் நோய் போய் வேறு நோய் வந்தது. அது வயிற்று வலி. அதற்குக் காரணம் அவன் ருசியான பண்டம் சாப்பிட்டதே. அவன் மறுபடியும் முன்போல் ஏழை வேஷம் போட்டுக் கொண்டு வெற்றிலை பாக்கில் கால் ரூபாயை வைத்து எடுத்துக் கொண்டு வைத்தியரிடம் போனான்.

அவன் வேதாசலத்திடம் கால் ரூபாயைக் கொடுத்து ''என் கண் போயிற்று. ஆனால் ஒரே வயிற்று வலி. அது போக மருந்து கொடுங்





கள்'' என்று கேட்டான். வேதாசலமும் அவன் கொடுத்த கால் ரூபாயை வாங்கிக் கொண்டு அவனது நாடியைப் பிடித்துப் பார்த்தார். பிறகு அவர் ''நீ எதைச் சாப்பிட்டு அஜீர்ணத்தை வரவழைத்துக் கொண்டாய்?'' என்று கேட்டார்.

திருவேங்கடமும் ''நீங்கள் கண் நோய்க்குச் சாப்பிடச் சொன்னதை நாற்பது நாட்கள் சாப்பிட்டதால் என் நாக்கு செத்து விட்டது. சிகிச்சை முடிந்ததால் ருசியான பண்டம் சாப்பிடத் துடித்தது சில லட்டுகள் எனக்குக் கிடைத்தன. அவற்றைத்தான் சாப்பிட்டேன்'' என்றான். வேதாசலமும் ''இவ்வளவு அஜீர்ணம் ஏற்பட்டதென்றால் சுத்தமான நெய்யில் தயாரித்த பல லட்டுகளையாவது நீ சாப்பிட்டிருக்க வேண்டும். அவ்வளவு லட்டுகள் உனக்கு எங்கிருந்து கிடைத்தன?'' என்று கேட்டார்.

திருவேங்கடமோ ''அது பற்றி பிறகு கூறுகிறேன். முதலில் என் வயிற்று வலி போக மருந்தைக் கொடுங்கள்'' என்றான். வேதாசலமோ ''உனக்கு இவ்வளவு நெய் லட்டுகளைக் கொடுத்தவன் மிகவும் பெரும் பணக்காரனாகத்தான் இருக்க வேண்டும். அவன் யார் என்று தெரிந்த பிறகே உனக்கு மருந்து கொடுப்பேன். பார்ப்பதற்கு நீ ஏழை போலத் தென்படுகிறாய். ஏழையான உனக்கு இந்த நோய் ஏற்படும்படிச் செய்ததற்காக அவனிடமிருந்து உன் சிகிச்சைக்காக ஒரு பெருந்தொகையை வசூலிக்கப் போகிறேன்'' என்றார்.

அது கேட்டு திருவேங்கடம் ''எங்கள் ஊரின் பெரும் பணக்காரர் திருவேங்கடம். அவர்தான் கொடுத்தார்'' என்றான். வைத்தியரும் ''ஓ! அப்படியானால் அவரிடம் போய் உன் சிகிச்சைக்காக நூறு ரூபாய் கேட்டு வாங்கி வா'' என்றார். திருவேங்கடமும் ''எப்படிக் கேட்பேன்? அவர் எனக்கு லட்டுகளை கொடுத்ததற்காக அவரிடமே என் வைத்திய செலவுக்கும் பணம் கேட்பது நியாயமா?'' என்று கேட்டான்.

வேதாசலமும் ''நியாயமோ 'அநியாயமோ' நீ அவரிடம் பணம் கேட்கத்தான் வேண்டும். நீ கேட்காவிட்டால் நானே அவரிடம் கேட்கிறேன். எனக்கும் உன் ஊரில் இன்று ஒரு வேலை இருக்கிறது. அங்கே நானே அவரிடமிருந்து பணத்தை வசூலித்துக் கொள்கிறேன்'' எனக் கூறி ஒரு குளிகையைக் கொடுத்து சாப்பிடச்

சொன்னார். அதை அவன் விழுங்கி நீர் குடித்ததும் அவனது வயிற்று வலியும் போயிற்று.

வயிற்று வலி போனாலும் திருவேங்கடத்தின் நாக்கில் அரிப்பும் எரிச்சலும் கண்டது. அவன் உடனேயே அங்கிருந்து குறுக்கு வழியில் ஓடித் தன் ஊரை அடைய முயன்றான். ஆனால் நடு வழியில் கால்கள் சோர்ந்து ஒரு மரத்தடியே உட்கார்ந்து விட்டான். அவன் தன் ஊருக்குப் போய்ச் சேரத் தாமதமாயிற்று.

இதற்குள் வைத்தியர் வேதாசலம் திருவேங்கடத்தின் ஊருக்குப் போய் அவனது வீட்டில் விசாரித்தார். அவர் வீட்டில் இல்லை என்றும் வெளியே போயிருக்கிறானென்றும் தெரிந்து கொண்டு அவன் வரும் வரை அவனது வீட்டில் காத்திருந்தார். திருவேங்கடம் தன் வீட்டை அடைந்த போது அங்கு வேதாசலம் உட்கார்ந்திருப்பதைக் கண்டு ''நீங்களா? வந்து விட்டீர்களா?'' எனக் கூறியவாறே 'பொத்' தென விழுந்தான்.

வேதாசலம் அவனைப் பார்த்து ''நான் சந்தேகித்தது சரியே. நீங்கள் ஏழை போல் வந்து என்னிடம் மருந்து கேட்டீர்கள். ஆனால் உங்களுக்கு வந்த நோய்கள் ஏழைகளுக்கு வருவதல்ல. உடல் உழைப்பால் வாழ்க்கை நடத்துபவர்களுக்கு இத்தகைய நோய்கள் வராது. ஒரு வேலையும் செய்யாமல் சுகமாக இருப்பவர்களுக்கு இத்தகைய நோய்கள் வரும். எனவே நான் ஏழைகளுக்குக் கொடுக்கும் மருந்தையே பணக்காரர்களுக்குக் கொடுப்பதில்லை. அப்படிக் கொடுத்தால் பணக்காரரின் நோய் போய் விடாது. முதல் முறை ஏழை போல் நீங்கள் வந்து கண் நோய்க்கு மருந்து கேட்ட போது உங்களை ஏழை எனக் கருதி மருந்து கூறினேன் அது கண் நோயை குணப்படுத்தியது. ஆனால் அடுத்த முறை நீங்கள் வந்தபோது நீங்கள் ஏழையல்ல என்று தெரிந்து விட்டது. உங்கள் ருசிக்கு ஏற்ப லேகியம், கிருதம், சூர்ணம் என்று தித்திக்கும் மருந்துகளைக் கொடுக்க வேண்டும். இப்போது அவற்றைக் கொடுத்து உங்கள் வயிற்று வலியை நிரந்தரமாகப் போக்குகிறேன் எனக் கூறி சில மருந்துகளைக் கொடுத்து வேதாசலம் ஐநூறு ரூபாய் வாங்கிக் கொண்டு போனார்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1997 செப்டம்பர் மாத இதழில் வெளியிடப்படும்.



TAJY PRASAD



K. SUBRAHMANYAM

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ ஜூலை 30–ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/– பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை–600 026.**

## மே மாதப் போட்டி முடிவு

| | |
|---|---|
| முதலாவது போட்டோ | : **எல்லை இல்லாத இன்பம்.** |
| இரண்டாவது போட்டோ | : **அளவு இல்லாத ஆனந்தம்.** |
| பரிசு பெற்றவர் | : **கே.எஸ். நிர்மலா, திருச்சி–14.** |




Printed by B.V. REDDI at Prasad Process private Ltd., 188, N.S.K. Salai, Madras - 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras - 600 026 (India), Controlling Editor: NAGI REDDI.

# Eggcetera

## Brain Scramblers for Kids

Hey, kids. What's yellow and white and good to eat?
Solve the crossword puzzle and you'll find the magic word in the coloured squares.


5 DOWN


4 DOWN


2 DOWN


1 DOWN


1 ACROSS


3 ACROSS


6 ACROSS




An egg is packed with protein, vitamins and 11 minerals essential for your body.




NATIONAL EGG CO-ORDINATION COMMITTEE

Have you had an egg today?

Answers: Cars, Smile, Swing, Cat, Mat, East, Jet